| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : ஆகஸ்ட், | 1983 |
| இரண்டாம் பதிப்பு | : ஜூன், | 1984 |
| மூன்றாம் பதிப்பு | : ஜனவரி, | 1985 |
| நான்காம் பதிப்பு | : டிசம்பர், | 1988 |
| ஐந்தாம் பதிப்பு | : மார்ச், | 1988 |
| ஆறாம் பதிப்பு | : மே, | 1989 |
| ஏழாம் பதிப்பு | : மே, | 1990 |
| எட்டாம் பதிப்பு | : அக்டோபர், | 1991 |
| ஒன்பதாம் பதிப்பு (கங்கை) | : டிசம்பர், | 1992 |
| பத்தாம் பதிப்பு (கங்கை) | : டிசம்பர், | 1993 |
| பதினொன்றாம் பதிப்பு (கங்கை) | : மார்ச், | 1995 |
| பன்னிரண்டாம் பதிப்பு (கங்கை) | : ஜூன், | 1996 |



**விலை ரூ.**



*ஆசிரியர் முகவரி :*

**டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி**
**மக்கள் சக்தி இயக்கம்**
**17ஏ, சௌத் அவென்யு**
**காமராஜ் நகர், திருவான்மியூர்**
**சென்னை – 600 041.**

---

Printed at : Ravi Raja Offset, Madras – 14.

செத்துப் பிழைத்தவர்கள் கண்ட

# ஆத்ம தரிசனம்

டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி

# முன்னுரை

இந்தப் புத்தகம் சற்று அசாதாரணமானது. மக்கள் உற்சாகத்துடன் வாழவேண்டும் என்ற நோக்கில் மனோ தத்துவ விளக்கம் கொடுத்து வருபவை எனது கட்டுரைகள்.

திடீரென்று, இக்கட்டுரைத் தொடரில், 'மனிதன் இறப்பிற்குப்பின் என்ன ஆகிறான், இறப்பு என்பது எத்தகைய அனுபவம்' என்று எழுதி இருக்கிறேன்,

திபேத்திய யோகி மிலாரெப்பா என்ற மகாயோகியின் வாழ்க்கை வரலாற்றைப் படிக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அந்தச் சமயத்தில் ஈவான்ஸ் என்பவர் எழுதியிருந்த ''இறந்தவர்களைப் பற்றிய திபேத்தியர்களது புத்தகம்'' - Tibetian Book of the dead என்பதும் கிடைத்தது.

இதற்கிடையில், டாக்டர் மூடி (Moody) அவர்கள் எழுதிய ''வாழ்வுக்குப் பின் வாழ்வு'' (Life After Life) என்ற நூல் அமெரிக்காவில் பிரபலப்பட்டுக் கொண்டிருந்தது. அந் நூல் என்னைக் கவ்விப் பிடித்தது. காரணம்? எவை எல்லாம் நமது இந்துமதப் பாரம்பர்ய நம்பிக்கைகளாகப்

செத்துப் பிழைத்தவர்கள் கண்ட

# ஆத்ம தரிசனம்



டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி



கங்கை புத்தகநிலையம்
13. தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-600 017

பேசப்பட்டு வந்திருக்கின்றனவோ அவற்றையெல்லாம், டாக்டர் மூடி முதன் முறையாக ஒரு விஞ்ஞான ஆராய்ச்சி நோக்கில் அனுபவ வாயிலாக, ஒரு பல்கலைக்கழக ஆராய்ச்சியாளர் என்ற முறையில் எழுதி இருந்தார்.

இதைப் படித்த நான் அடைந்த மகிழ்ச்சி அளவில்லாதது. இந்து மத நம்பிக்கைகளில் நமது அனுமானத்திற்குப் புலனாகும் பல விஷயங்களைப் பகுத்தறிவாளர்—ஆராய்ச்சியாளர்—சொல்லும் வகையில்—ஏற்றுக்கொள்ளும் வகையில்—நம்மால் விளக்கமுடிவதில்லை.

ஆனால் அப்படி விளக்க இதோ ஒரு புத்தகம்!

செத்துப் பிழைத்தவர்களது அனுபவங்கள் எல்லாம் இறந்தவர்களது அனுபவங்கள் என்று நமது முன்னோர் எழுதிவைத்த அறிவோடு பொருந்தி இருக்கின்றன.

''இதனால் என்ன பயன்?'' என்று நானே கேட்டுக் கொண்டேன், இதை எழுதியபோது.

'முன்வினைப் பயன்' என்ற நினைவு எப்படி இன்றைய வாழ்வை நல்ல வகை வாழ நம்மை நெறிப்படுத்துகிறதோ, அதேபோல செத்துப் பிழைத்தவர்களது அனுபவங்கள் வாழ்வின் தாத்பரியங்களை நமக்குப் புரியவைக்கின்றன.

வாழ்வின் அந்தத் தாத்பரியங்கள்தான் என்ன?

1. வாழ்க்கை என்பது ஒரு பள்ளி; அறிவுப் பயிற்சி பெற ஒருபள்ளி ஆத்மா; இதை உபயோகித்து முன்னேற உதவும் ஒரு கல்விக்கூடம் இவ்வாழ்க்கை.

2. வாழ்க்கை என்பது அன்பென்னும் பந்தத்தால் இணைந்த பிரபஞ்ச இயக்கம், ஆகவே நாம் எங்கும், எத்துடனும் அன்பால் பிணைக்கப்பட வேண்டும். அதில் மகிழ்ச்சி உண்டாகிறது. அன்பிற்கு மறுபெயர்தான்

உலகை இயக்கும் சக்தி என்று சில சமயம் தோன்றுகிறது. ''அன்புதனில் செழித்திடும் வையம்'' என்றார் பாரதி. செத்துப் பிழைத்தவர்கள் பலரும் ஓர் ஒளியைச் சந்தித்த தாகக் கூறினார்கள். தியானத்தின்போதுகூட சில சமயம் இந்த தேஜோமயானந்த அறிவொளி நமக்குக் கிடைக்கிறது. ஆகவே நாம் தினம் தியானம் செய்வது நல்லது.

அன்பு காட்டும்போது நாம் நம் வாழ்க்கைக்கும் பிறர் வாழ்க்கைக்கும் உதவுகிறோம். அதேபோல் நாம் பெறும் அறிவுப் பயிற்சியைப் பிறருடன் பகிர்ந்துகொள்வதும் ஒரு உதவிதான். மேலாக, அறிவுப் பயிற்சி என்று இங்கே குறிப் பிடுவது ஞான யோகம் என்று நம் முன்னோர் குறிப்பிட் டதைத்தான்.

அதேபோல் பக்தியோகம் எனும்போது பக்தி கடவுள் மீது செலுத்தப்படுவதைக் குறிப்பிடுகிறது. அதே உணர்வு மக்கள் மீது செலுத்தப்படுவதைத்தான் அன்பு என் கிறோம்.

வாழும் நடைமுறை உலகில், நாம் பிற மக்களுடன் வாழ்கிறோம்; பிற உயிரினங்களுடன் வாழ்கிறோம். ஆக இங்கே அன்புதான் பிரதானமாகிறது.

அதுபோல பல விஷயங்களையும் தெரிந்துகொள்ளும் போது—ஞான மார்க்கத்தின் மூலம் நாம் அந்த தேஜோ மயானந்த நிலையை அடைகிறோம்.

இப்படி எல்லாம் நான் எண்ணி இத்தொடரை எழுதிய போது ஒரு பத்திரிகாசிரியர் தன் கேள்வி பதிலில் கேட்டிருந் தார், ''நாட்டிற்கு இது இப்போது தேவையா? இதைவிட எவ்வளவோ முக்கியமான விஷயங்கள் இல்லையா?'' என்று.

*யார் அவர்?*

நமது சினிமா நட்சத்திரங்களின் அங்க அளவுகளை கேள்வி பதிலில் ஒப்பிட்டுக் கொண்டிருந்தவர்—அது முக்கியம் வாழ்க்கைக்கு என்று கருதியவர்.

எனினும் அவரது கேள்வியில் ஒரு வகை நியாயம் இருந்தது.

அதேபோல் என் உறவினர் ஒருவர், ''இது மக்களை செயல் இழக்க வைக்காதா? இந்த நம்பிக்கைகள் நம் மக்களை பழைமைப் பாதையில், தள்ளிவிடாதா? அதிலிருந்து—மீண்டு வருவதற்குக் கட்டுரை எழுதிய நீங்கள் இப்போது இதைப்போய் எழுதி மக்களை நம் பாரம்பரிய நம்பிக்கைகளில் மீண்டும் ஊறப்போடுகிறீர்களே'' என்று எழுதி இருந்தார்.

அவர் கூற்றிலும் ஒருவகை நியாயம் இருந்தது. நான் பெற்ற ஒரு அறிவு விளக்கத்தை மற்றோரும் பெறவேண்டும் —பெற்றுப் பயனடைய வேண்டும் என்ற ஆர்வத்தில்—நன்னோக்கில்—இதை எழுதினேன் என்பதுதான் எனது ஒரே பதில்.

வாழ்க்கைப் பேரொளியை நீங்கள் இக்கட்டுரைகளில் அடிக்கடி சந்திப்பதன்மூலம், இந்த நினைவு உங்கள் ஆழ் மனத்தில் தங்கி உங்களுக்குப் பிரபஞ்ச அறிவுடன் ஒரு தொடர்பை ஏற்படுத்தித் தரும் என்ற நம்பிக்கை என் அனுபவத்தின் வாயிலாக எழுந்தது.

இதற்கிடையில், பேய் பிசாசுகள். ஆவிகள், இறந்தவர் களுடன் பேசுதல் என்று இந்த நம்பிக்கைகளுக்கு வெகு அருகே ஒரு தனி ஆவி உலகமே இருக்கிறது என்பதையும் உணர்ந்தேன். படித்தவர்கள், ஞானிகள், யோகிகள் பலர் அதில் இறங்கி இருக்கிறார்கள்.

ஹிஜூலின்கேசி என்ற பிரபல மனோதத்துவ சிந்தனை யாளர் கூறுகிறார், ''ஆவி உலகம், நம் ஆழ்மனத்தைத் திறக்க உதவும் அபாயத் திறவுகோல்'' என்று. இது முற்றிலும் உண்மை.

ஆழ்மனத்தையும் பிரபஞ்ச அறிவையும் திறக்கும் நல்ல திறவுகோல் தியானம் மட்டுமே. பிரார்த்தனை, ஆழ்நிலைத் தியானம், யோகம் இவை எல்லாம் பத்திரமான திறவு கோல்கள்.

இந்த ஒரு பரந்த பகைப்புலத்துடன் இத்தொடரைப் படியுங்கள்.

தேஜோமயானந்த ஒளி உங்கள் நினைவின் ஒரு பகுதி யாக ஆகட்டும். அது அறிவை வளர்க்கட்டும்; அன்பைப் பரப்பட்டும்.

''கிழக்கு வெளுத்தது கருணை அருட்சோதி
உதயம் கிடைத்தது''

என்கிறார் வடலூர் இராமலிங்க அடிகள்.

இதையே பத்திரகிரியார்,

''உற்று உற்றுப் பார்க்க ஒளி தரும் ஆனந்தமிதை
நெற்றிக்கு நேர் கண்டு நினைத்திருப்ப தெக்காலம்?''

என்று பாடுகிறார்.

நெற்றிக்கு நேரே இருப்பதுதான் பைனியல் கிளாண்டு (Pineal Gland) எனப்படும் ஓர் உறுப்பு. குண்டலினி யோகத்தில் நமது விந்து—கருவில் இருந்து—முள்ளந்தண்டு வழியாக உயிர்த்திரவத்தை உச்சிக்குக் கொண்டுபோய் இந்த பைனியல் கிளாண்டில் சேர்க்கும்போது மனிதன் ஞான திருஷ்டி பெறுகிறான். ஞானத்தெளிவு பெறுகிறான் என்கிறார்கள் ஞானிகள். அப்போது தெரிவதுதான் இந்த ''தேஜோமயானந்தம்'' என்று கூறுகிறார்கள்.

என்னருமை வாசகர்களே!

வாழ்க்கையில் ஒருபடி முன்னேறியதாக ஒரு தெளிவு ஏற்படுமாயின் அதுவே இப்புத்தகம் எழுதியதன் பயன். அந்தத் தெளிவில் ஒரு நிறைவையும், மகிழ்வையும் ஒளி வடிவில் காண்பீர்களாயின்—கற்பனையிலோ அல்லது தியானத்திலோ — அதுவே நீங்கள் முன்னேறியதைக் காட்டும் அனுபவம்.

அத்தகைய ஆத்ம அனுபவங்கள் வாய்க்க என் பிரார்த்தனைகள்.

அன்புடன்

**எம். எஸ். உதயமூர்த்தி**

உன்னால் முடியும் தம்பி!

# எம். எஸ். உதயமூர்த்தி

## வாழ்க்கைக் குறிப்பு

மனவியலைப் பற்றித் தொடர்ந்து கடந்த இருபத்தி ஐந்து ஆண்டுகளுக்கு மேலாக தமிழ்ப் பத்திரிக்கைகளில் கட்டுரைகள் எழுதி வருபவர் டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி. மனோதத்துவங்களை வாழ்க்கைக்கு எப்படிப் பயன்படுத்துவது என்பதைச் சுமார் 14 நூல்களில் வடித்து தந்திருக்கிறார் அவர். சிறந்த ஆசிரியர் என்ற விருதும், 'பூல் பிரைட்' அறிஞர் (FULBRIGHT SCHOLAR) என்ற கௌரவமும் இவருக்கு உண்டு.

எம்.எஸ். உதயமூர்த்தி விளநகர் என்ற கிராமத்தில், மயிலாடுதுறை தாலுக்காவில், தஞ்சை மாவட்டத்தில் பிறந்தவர். இவரின் பெற்றோர் திரு. சிங்காரம், கமலம்மாள் ஆவார். மயிலாடுதுறை உயர்நிலைப் பள்ளியில் படித்த பின் அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் இளநிலை பட்டப்படிப்பும், முதுநிலைப் பட்டப்படிப்பும் பெற்றார். சென்னை பல்கலைக் கழகத்தில் தனது பாடமான வேதியியலில் மற்றோர் முதுநிலைப் பட்டம் பெற்றபின் மேல் படிப்புக்கு அமெரிக்கா சென்றார்.

அமெரிக்கா செல்லுமுன் சீர்காழி இந்து உயர் நிலைப்பள்ளியிலும், குடந்தை அரசினர் கல்லூரியிலும் ஆசிரியராகப் பணியாற்றினார். பின் கிண்டி

பொறியியற் கல்லூரியில் உதவிபேராசிரியராக பணி புரிந்தார்.

அமெரிக்காவில் விஸ்கான்சின் பல்கலைக்கழகத்தில் மருத்துவ ரசாயனத்தில் 'டாக்டர்' பட்டம் பெற்று ஒரு பத்தாண்டுகள் விஸ்கான்சினிலுள்ள மவுண்ட் செனாரியோ கல்லூரியிலும் மின்ன சோட்டா, ஐடகோ பல்கலைக் கழகங்களிலும் பேராசிரியராகப் பணியாற்றினார்.

பின் ஆசிரியத் துறையை விட்டுவிலகி, விஸ்கான் சினில் உணவு தயாரிக்கும் நிறுவனம் ஒன்றில் அதன் தலைமை நிர்வாகியாக நான்காண்டுகள் பணியாற்றி னார். 1982-ல் (Barclay Chemicals) பார்கிளே கெமிக்கல்ஸ் என்ற ரசாயனப் பொருள்களை உற்பத்தி செய்யும் தனது சொந்த நிறுவனத்தைத் துவங்கினார். **"அமெரிக்காவில் தொழில் துறையில் உள்ளவர்கள் யார் யார்"** என்ற நூலில் (Directory of who is who in Business and Finance in the U.S.A.) அவரது பெயர் இடம் பெற்ற பெருமையும் இவருக்குண்டு. அந் நிறுவனத்தை தனது குமாரரிடம் ஒப்படைத்து விட்டு 1987-ல் நிரந்தரமாக இந்தியா வந்தார். இன்று சென்னையில் வசிக்கின்றார் அவர்.

சுய வளர்ச்சி பெற வாசகர்கள், 'எண்ணங்கள்', 'மனம்', 'பிரார்த்தனை', 'மந்திரம்' 'நெஞ்சமே அஞ்சாதே நீ', 'தட்டுங்கள் திறக்கப்படும்' —என்ற அவரது நூல்களைப் படியுங்கள்.

சுய பொருளாதார மேம்பாடு பெற அவரது 'சிந்தனை, தொழில், செல்வம், என்ற நூலை தாரக மந்திரமாக உபயோகியுங்கள்.

சமுதாய ஈடுபாட்டின் அவசியத்தை உணர அவரது 'நாடு எங்கே செல்கிறது' என்ற நூலையும், 'நம்மால்

முடியும் தம்பி, நம்பு', 'நீ தான் தம்பி முதலமைச்சர்' என்ற நூல்களையும் படித்துப் பாருங்கள்.

எம். எஸ். உதயமூர்த்தியின் உந்துதல்கள் கன்யாகுமரியிலிருந்து கிருஷ்ணகிரி வரை, வேதாரண்யத்திலிருந்து வால்பாறைவரை இளைஞர்களை, பெண்களை படித்த மக்களை ஒரு உத்வேகம் பெறச் செய்திருக்கிறது. டைரக்டர் பாலசந்தர், 'உன்னால் முடியும் தம்பி' என்ற தலைப்பில், கதாநாயகனுக்கு உதயமூர்த்தி என்ற பெயரைச் சூட்டி, ஒரு திரைப் படத்தை வெளியிட்டிருக்கிறார். பாலசந்தரிலிருந்து பள்ளி இளைஞர்கள் வரை, அவரது எழுத்துக்கள் ஒரு பாதிப்பை — ஒரு உத்வேக உணர்வை — ஒரு நம்பிக்கையை உருவாக்கி இருக்கிறது. இதன் விளைவாக, ஒரு அமைதியான மாற்றம் நாட்டில் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது.

தனது அறிவுக்கும், திறமைக்கும் ஏற்ற ஒரு புதிய சமூதாயத்தைத் தமிழகம் பெற வேண்டும் என்று விரும்பும் எம். எஸ். உதயமூர்த்தி, இதற்காக மக்கள் சக்தி இயக்கம் என்ற ஒரு புதிய இயக்கத்தை ஆரம்பித்திருக்கிறார்.

தொகுப்பு: G. சீனிவாசன் Ex. P.T.C.

## டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி

### எழுதிய இதர நூல்கள்

உயர் மனிதனை உருவாக்கும் குணங்கள்
நெஞ்சமே அஞ்சாதே நீ
தட்டுங்கள் திறக்கப்படும்
மனம் பிரார்த்தனை மந்திரம்
தலைவன் ஒரு சிந்தனை
எண்ணங்கள்
மனித உறவுகள்!
பிரச்சினைகளுக்கு முடிவு காண்பது எப்படி?
நாடு எங்கே செல்கிறது?
தன்னம்பிக்கையும் உயர் தர்ம நெறிகளும்
சிந்தனை தொழில் செல்வம்
நம்மால் முடியும் தம்பி-நம்பு!
நீதான் தம்பி முதலமைச்சர்
ஜேம்ஸ் ஆலனின்
வாழ்க்கை அமைக்கும் எண்ணங்கள்

## பொருளடக்கம்

# 1. வாழ்வுத் தொடரில் ஒரு ஒளி...

இது சற்று அசாதாரணமான கட்டுரைத் தொடர் ஆகவேதான் இந்த முன்னுரை.

இத்தனை நாளும் வாழும் விதம் பற்றி எழுதி வந்தேன். மனோதத்துவ நிபுணர்களும், மனசிகிச்சை மருத்துவர்களும் வாழ்வு பற்றி என்ன கூறுகிறார்கள் என்ற அறிவை அனுபவத்தோடு கலந்து எழுதினேன். இது வாழும் விதம் பற்றியது அல்ல. இங்கே வாழும் வழி முறைகள் கற்பிக்க அதிகம் கிடையாது. இது வாழ்வின் தாத்பரியத்தைப் பற்றியது; வாழ்வின் அடிப்படையைப் பற்றியது. "ஏன் வாழப் பிறந்திருக்கிறோம்? இதில் ஏதாவது ஒரு காரணம், ஒரு நியாயம், ஒரு குறிக்கோள் உண்டா?" என்பதைப் பற்றியது.

இது மனோதத்துவக் கட்டுரை அல்ல. இது, வாழ்க்கைத் தத்துவத்தைப் பற்றிய கட்டுரை. எல்லோருக்கும் புரிந்துவிடும் என்றோ, இதில் வரும் கருத்துக்களை எல்லோரும் ஏற்றுக்கொண்டு விடுவார்கள் என்றோ நான் பூரணமாக நம்பவில்லை.

இது விஞ்ஞானபூர்வமான ஆதார அடிப்படையில் எழுதப்படுவதல்ல. இது தனி மனிதனது அனுபவங்களையும், நமக்கு முன் வாழ்ந்த நம் மூதாதையர் விட்டுப் போன அனுபவ அறிவையும் சார்ந்து எழுதப்படுவது.

ஆத்மா என்றும், பிரபஞ்ச அறிவு என்றும் முன்பு எழுதியபோது என்னுள் பெரிய தயக்கமிருந்தது. நான் விஞ்ஞானம் பயின்றவன். விஞ்ஞான அடிப்படையில் எதையும் அணுக முயல்பவன். நமது நம்பிக்கைகளை அனுபவம் என்ற உரைகல்லில் உரைத்துப் பார்த்து எப்படி நம்புவது? ஆதாரம் என்ற உரைகல்லில் அல்லவா உரைக்க வேண்டும் என்கிற விஞ்ஞானிக் கேற்படும் தயக்கம் அது.

வாழ்வு பற்றியும், இறப்பு பற்றியும், இறப்பவர்களுக்கேற்படும் வேறு உலக அனுபவங்களையும் பற்றியது இக்கட்டுரை. ஓராண்டிற்குமுன் இதுபற்றிப் 'படிக்கத் துவங்கிய' எனக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. எனக்கேற்பட்ட அதிர்ச்சி 'படித்தவர்கள்', 'விஞ்ஞானிகள்' எப்படி இதை ஏற்றுக்கொள்வார்கள் என்ற அச்சமே. ஆனால் என் அறிவும் அனுபவமும் 'சாவுக்குப்பின் வாழ்வு' என்பதில் உண்மை இருக்கிறது என்று உணர்த்திக் கொண்டிருந்தது. ஓராண்டு காலமாக இதை எழுதத் துணிவைத் தயார் செய்து கொண்டிருந்தேன்.

இதுபற்றி ஆராய்பவர்கள் சர்வதேசப் புகழ்பெற்ற பட்டம்பெற்ற மருத்துவர்கள், மனசிகிச்சை நிபுணர்கள். பல பல்கலைக்கழகங்கள்-வர்ஜினியா பல்கலைக் கழகம், ஸ்டான் போர்டு பல்கலைக் கழகம், அயோபா, கான்சாஸ், கலிபோர்னியா என்று-இதுபற்றி, ஆராய்ந்து வருகின்றன. எனினும் நமது விஞ்ஞானக் கருவிகளை உபயோகித்து உண்மை காணும் அளவுக்கு இந்தத் தலைப்பு வளைந்து கொடுப்பதில்லை ஏன்?

இறப்பு என்பது ஒரு முதன்முறை அனுபவம். அதை அனுபவித்துப் பிழைத்து மீண்டவர்கள் கூறுவதெல்லாம் தாங்கள் கண்டவற்றையும், அனுபவித்ததையும்தான்.

பிற மனிதன் ஒருவன் அனுபவித்து முடித்த ஒன்றை நாம் எப்படி பின்னோக்கிச் சென்று பார்ப்பது? ஆராய்வது?

இன்று அறிஞர்களும் விஞ்ஞானிகளும், பல்கலைக் கழகங்களும் ஆராய்வதை, நமது முன்னோர்கள் வெகு காலத்திற்குமுன்னே கூறியிருக்கிறார்கள். நமது பழைய புத்தகங்களில் இதே அனுபவங்கள் பேசப்படுகின்றன.

ராமகிருஷ்ண பரமஹம்சரை முதன்முதலில் சந்தித்த போது கேள்விமேல் கேள்வியாகக் கேட்டுக் கொண் டிருந்தாராம் விவேகானந்தர். விவேகானந்தரைக் கண்ட மகிழ்வில் ராமகிருஷ்ணர் அவரை அன்புடன் தழுவிக் கொண்டாராம். அந்தத் தழுவலில் ''எனது எல்லாக் கேள்விகளுக்கும் விடை புரிந்துவிட்டது'' என்ற உணர்வு ஏற்பட்டதாம் விவேகானந்தருக்கு.

ரமணர் ஆசிரமத்தில், காஞ்சிப் பெரியவரின் முன் னிலையில், பல்வேறு அசாதாரண சூழ்நிலையில் மனிதர் களுக்கு அப்படிப் பல அனுபவங்கள் ஏற்படுகின்றன. இந்த அனுபவம் சொந்த அனுபவம். அவரவர்கள் அனு பவித்திருந்தால் மட்டுமே உணர முடியும். மற்றவர் களுக்கு இது பிதற்றல் போலவும், இப்படிப் பேசுவது சித்தம் பேதலித்த செயல் எனவும் படக்கூடும்.

ஏழு வயதுப் பையனை நோக்கி நீ கல்யாணம் செய்துகொண்டு என்ன செய்வாய் என்றால் அவன் வெட்கப்படுவான். செக்ஸ் பற்றிய பூரண உணர்வு வளராத உடல்நிலை; உள்ள நிலை அது. அதேபோல் ஆத்ம விசாரணைக்கும் சற்று வயது, அனுபவம், வளர்ச்சி, அறிவு தேவையென நான் யோசிக்கிறேன்.

சில அனுபவங்கள்தான் நம்மை வாழ்வின் தாத் பரியம் பற்றிச் சிந்திக்கத் தூண்டுகின்றன. அந்த

முதிர்ச்சி இல்லாதபோது—விளங்காதபோது—மனிதன் "விட்டதடி உன் ஆசை விளாம்பழத்து ஓட்டோடே" என்று கூறக்கூடும். அனுபவங்களைத் தூக்கி எறியக் கூடும். விளாம்பழம் வாசனை அடித்ததாம். ஆகவே மனிதன் கடிக்க முயன்றானாம்; கடிக்க வரவில்லை. ஓடு அத்தனை கனம். உடைத்துப் பார்க்கலாம் என்று அவனுக்கு எட்டவில்லை. ஆகவே உபயோகமற்றது என்று அவன் தூக்கி எறிந்துவிட்டானாம்.

நமது விஞ்ஞான அறிவை வைத்துக்கொண்டு தான் எதையும் தீர்மானிப்பது என்றால் விளாம்பழத்தைக் கடிக்க முயன்ற கதைதான். விஷயங்களைப் பரிசீலிக்க நாம் கடைப்பிடிக்கும் ஆதாரபூர்வமான முறைகளுக் கப்பால் சில உண்மைகள் இருக்கின்றன. விளாம்பழத்தை உடைத்தால்தான் அதை அனுபவிக்க முடியும் என்பதைப் போல அனுபவத்தின் மூலம்தான் அவற்றை உணர முடியும்.

சாவுக்குப் பின்னும் வாழ்வு இருக்கிறது என்பதைத் தான் மனசிகிச்சை மருத்துவர்களின் சமீபத்திய ஆராய்ச்சிகள் கோடி காட்டுகின்றன. உடல் என்பது என்ன, மனம் என்பது என்ன, இறப்பு என்பது என்ன என்பதை நாம் பிறர் அனுபவங்களிலிருந்து புரிந்து கொள்வதுதான் இக்கட்டுரையின் நோக்கம்.

"வாழ்வின் அடிப்படை உண்மைகளைப்பற்றி மதம் தான் பேசுகிறது. மற்றபடி யாரும் பேசப் பயப்படு கிறார்கள்" என்கிறார் மனசிகிச்சை நிபுணர் டாக்டர் மூடி (Moody)

ஜான் லில்லி என்ற ஒரு பெரிய மருத்துவர் சில ஆண்டுகளுக்குமுன், சில மருந்துகளை உட்கொண்டு மன

மாறுதல்களைப் பற்றி ஆராய்ச்சி செய்தார். அவர் எழுதுகிறார். ''திடீரென்று என் உடலைவிட்டு அப்பால் போகிறேன். ஒரு நீண்ட இருண்ட குகை வழியே போகிறேன். பெரிய ஒளி தென்படுகிறது. அதைக் கண்டதும் என் மனத்தில் மகிழ்வு—ஒரு நிறைவு ஏற்படுகிறது. 'இப்போது வரவேண்டாம். இன்னும் கொஞ்ச காலம் கழித்து வா' என்று அந்தப் பெரியவர்கள் கூறுகிறார்கள். நான் என் உடலுக்குள் மீண்டும் புகுகிறேன்.''

பலர்—மருத்துவ மனைகளில் — மருத்துவர்களால் இறந்துவிட்டதாக அறிவிக்கப்பட்டார்கள். 5 நிமிடத்திலிருந்து மூன்று மணி வரை மூச்சில்லை; இதயத்துடிப்பில்லை; ரத்த அழுத்தமில்லை; மூளையில் மின் இயக்கமில்லை; 'மனிதன் போய்விட்டான்' என்று மருத்துவர்களால் கூறப்பட்டவர்கள் உயிர் பிழைத்து வந்திருக்கிறார்கள். அந்தத் தற்காலிகமாக இறந்த நிலையில் அவர்கள் எங்கே சென்றார்கள்? உடலை விட்டு ஆவி வெளியேறியதாகவும், தலையும் வாலும் கொண்ட நிழல் போல் அது இருந்தது எனவும், கீழே கிடக்கும் இறந்த உடலைப் பார்க்க முடிந்தது என்றும், பேச்சு மூலம் பிற மனிதர்களுடன் விஷயங்களைத் தெரிவிக்க முடியவில்லை எனவும், ஆனால் எல்லாவற்றையும் உணர்ந்ததாகவும், காலம், இடம் ஒரு பொருட்டில்லாமல் ஆவி சஞ்சாரம் செய்ய முடிந்தது என்றும், இருண்ட குகை வழியே சென்றதாகவும், பேரொளி ஒன்றைச் சந்தித்ததாகவும் இறந்த நண்பர்களையும் கண்டதாகவும், இவ்வுலக பந்தம்—நிறைவேறாத பணிகள் காரணமாக மீண்டும் இவ்வுடலுக்குள் புகுந்து கொண்டதாகவும் அவர்கள் கூறினார்கள்.

இதெல்லாம் அவரவர்களது தனிப்பட்ட அனுபவம். இதையே தான் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் "இறந்தவர்களைப் பற்றிய திபேத்தியப் புத்தகம்" என்ற தலைப்பில் நமது முன்னோர்கள்—திபேத்தியப் பெரியவர்கள் எழுதி வைத்திருக்கிறார்கள்.

நமது முன்னோர்கள் 'விஷயம் தெரியாத மனிதர்கள்' என்று தள்ளுவதா? தனி மனிதர்கள் பலர், ஒருவருடன் ஒருவர் தொடர்பின்றி, சாவுக்குப் பின் நிகழ்வதை ஒரே விதமாக வருணிப்பதை 'முட்டாள்தனம்' என்று ஒதுக்குவதா! இல்லை ஏதோ உண்மை இருக்கக்கூடும் என்று திறந்த மனத்துடன் பரிசீலிப்பதா?

எதையும் பாரபட்சமில்லாமல், தர்க்க ரீதியாக விஞ்ஞான நோக்கில், பார்க்க முயலும் அமெரிக்க மருத்துவர்களும், விஞ்ஞானிகளும் இதுபற்றி என்ன கூறுகிறார்கள் என்பதைக் காணலாம்.

# 2. நமது முந்தையர் - ஞானத் தந்தையர்

சர்வதேசப் புகழ்பெற்ற மன சிகிச்சை மருத்துவர் டாக்டர் குப்ளர் ராஸ். கடந்த இருபதாண்டுகளாக 'பிழைக்க முடியாது' என்று மருத்துவர்களால் கைவிடப் பட்டவர்களைக் கண்டு பேசி, அவர்களைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறார் ராஸ்.

இறப்பு என்பதைப்பற்றி எண்ணும்போது எல்லோ ருக்குள்ளும் ஒரு சலனம்-பயம் ஏற்படுகிறது. எங்கோ தெரியாத இடத்திற்குப் போவது போலப் பயம். எல்லா வற்றையும் முடிக்காமல் விட்டுவிட்டுப் போவதில் ஒரு தயக்கம். எத்தனையோ அனுபவிக்க இருக்க, எல்லா வற்றையும் துறந்துவிட்டுப் போவதா என்று ஒரு மனக் கலக்கம்; எப்படிப் போவேன் என்றொரு ஏக்கம். அது ஒரு வலிவான உணர்வு. நாம் அதைப் பற்றிப் பேசவே, சிந்திக்கவே பயப்படுகிறோம். இறப்பைப் பற்றி நாம் கொண்டிருக்கும் மனோபாவமே இதற்கு காரணம்.

ஆனால் ராஸின் ஆராய்ச்சியில் சாவின்போது ஒரு மகிழ்ச்சியை, நிம்மதியை, ஒரு நிறைவை சாகிறவர் களின் முகத்தில் காண முடிந்ததாம். சில சமயம் சாகும்

முன் யாருடனோ அவர்கள் பேசுவதை அவர் கவனித் திருக்கிறார். சாகுந்தறுவாயில் ஏற்படும் அனுபவம் நாம் வழக்கமாகக் கொண்டிருக்கும் எண்ணங்களுக்கு மாறு பட்டது என அவரது நோயாளிகள் கூறினார்கள்.

இறந்தவர்கள் முகத்தைப் பார்த்துவிட்டு முகத்தில் ''ஒரு தெளிவு ஏற்பட்டிருக்கிறது. கவனித்தீர்களா?'' என்று நமது ஊரில் பிறர் சொல்லக் கேட்டிருக்கிறோம். அவர்கள் யாருடனாவது பேசுவதுபோல் தோன்றினால் ''அவர்கள் கண்ணுக்கு என்ன தெரிகிறதோ!'' என்று நம் வீட்டுப் பெரியவர்கள் கூறக் கேட்டிருக்கிறோம்.

நோய்ப்படுக்கையில் உள்ளவர்கள் 'காலஞ் சென்ற' நண்பர்களுடனும், உறவினர்களுடனும் பேசியதாக டாக்டர் ராஸிடம் கூறினார்கள். ஒருநாள் டாக்டர் ராஸ் புற்று நோய்ப்பட்டு சாக இருந்தவரைப் பேட்டி கண்டார். அந்த நோயாளி பெரிய தயக்கத்துடன் கூறி னார்: ''நான் இதுவரை இதை யாரிடமும் கூறிய தில்லை. 'பைத்தியக்காரி' என்று பரிகாசம் செய்வார்கள் என்ற பயம். அவர்களால் நான் சொல்வதைப் புரிந்து கொள்ளமுடியாது என்ற நினைப்பு எனக்கு.

திடீரென்று என் உடலைவிட்டு நான் வெளியேறி விட்ட உணர்வு எனக்குத் தோன்றியது. என் உடல் கீழே படுக்கையில் கிடப்பதை என்னால் காணமுடிந்தது. நாடித் துடிப்பு இல்லை. ரத்த அழுத்தம் விழுந்து விட்டது. மூளை இயக்கமும் மருத்துவப்படி நின்று விட்டது. என் நிலையைக் கண்ட நர்ஸ் பதறிப் போய் டாக்டரைக் கூப்பிட்டார். எல்லோரும் ஓடி வந்து என்னை உயிர்ப்பிக்கப் பலவாறு முயல்கிறார்கள். நான்

எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு உயரே மிதக்கிறேன். ஒரு விடுதலை பெற்ற நிம்மதி என்னிடம். 'கவலைப்படாதீர்கள், நான் நல்லபடியாய்த்தான் இருக்கிறேன்' என்று சொல்ல விழைகிறேன். முடியவில்லை. அங்கு நடந்த ஒவ்வொரு நிகழ்ச்சியையும் விவரமாக என்னால் காண முடிந்தது. அவர்கள் சொன்ன ஒவ்வொரு சொல்லையும் நான் கேட்டேன். சுமார் மூன்று மணி நேரத்திற்குப் பின் நான் என் உடலில் மீண்டும் புகுந்தேன். அதற்குப்பின் சுமார் 18 மாதங்கள் வரை வாழ்ந்து வருகிறேன். அது ஒரு அசாதாரண அனுபவம். அதற்குப் பின் சாவைப் பற்றிய பயம் என்னிடம் இல்லை. இறப்புக்குப் பின் ஜீவன்—ஆத்மா வாழ்கிறது.''

இந்தப் பேட்டி டாக்டர் ராஸை ஆழ்ந்த சிந்தனையில் இறக்கிவிட்டது. அதிலிருந்து ஒரு திறந்த மனத்துடன் நூற்றுக்கணக்கான மனிதர்களை — மரணத் தறுவாயில் உள்ளவர்களை—அவர் பேட்டி கண்டார்.

எல்லாவற்றிலும் உடலும் மனமும் இறப்பின்போது பிரிகிறது என்றும், ஒரு பெரிய அமைதியும் நிறைவும் ஏற்படுகிறது என்றும், கண்டத்திலிருந்து மீண்டவர்கள் திரும்பத் திரும்பக் கூறினார்கள்.

டாக்டர் ராஸ் கூறுகிறார்: ''நான் பேட்டி கண்ட ரசாயன விஞ்ஞானியின் அனுபவம்தான் அதிசயமானது. விஞ்ஞானி ஆய்வுக்கூட சோதனை ஒன்றில் தன் இரு கண்களையும் பறிகொடுத்துவிட்டார். அவரால் ஏதும் பார்க்க முடியாது. ஆனாலும் மரணத்தறுவாயில் நின்ற போது மருத்துவர்கள் அவரை இறந்துவிட்டதாகப் பிரகடனம் செய்துவிட்டார்கள். எனினும் கொஞ்சநேரம்

கழித்து அவர் பிழைத்துக் கொண்டார். அவர் பிழைத்த போது—அந்தக் கண்ணில்லாதவர்—அங்கே மருத்துவ மனையில் என்ன என்ன நிகழ்ந்தது என்பதை விவர மாகத் தெளிவாகக் கூறியதைக் கேட்டு டாக்டர்கள் அயர்ந்து போனார்கள்!''

இறப்பின்போது நம்மை வரவேற்க ஏதோ ஓர் பேரொளி இருப்பதாகவும் வழிகாட்டுவதாகவும் அவர் கள் கூறினார்கள். சில சமயம் இறந்துபோன உறவினர் களைக் கண்டதாகவும் பேசியதாகவும் அவர்கள் கூறி னார்கள்.

''யாரோ நமக்கு உதவக் காத்திருக்கிறார்கள். அக்கரையில் உடலைவிட்டுப் பிரியும்போது ஒரு விடுதலை உணர்வும் அமைதியும் ஏற்படுகிறது'' என்று மரணத் தறுவாயில் அனுபவம் பெற்றவர்கள் கூறுகிறார்கள்.

ஏன் உடலுக்குள் மீண்டும் புகுந்து இவ்வுலகத் திற்குத் திரும்பவும் வருகிறார்கள்? ''என் குழந்தையின் அழுகுரலைக் கேட்டேன்.'' ''என் மனைவி விஷயம் தெரியாதவள். இன்னும் கொஞ்ச காலத்திற்கு நான் உதவ வேண்டும் என்ற உணர்வு எழுந்தது,'' ''அந்தப் பேரொளி என்னைப் பார்த்த உணர்வில் எனக்கு நேரம் வரவில்லை. அங்கே போக என்பதை உணர்ந்தேன்'' என்று காரணம் கூறுகிறார்கள். ஆக நமது பந்தம், ஆசைகள், ஈடுபாடுகள், நிறைவேறாத பணிகள், நமது காலம் என்று பல விஷயங்கள் இறந்தவர்களை மீண்டும் இவ்வுலக வாழ்க்கைக்குத் திருப்பி அனுப்புகின்றன.

''என்ன அந்தப் பேரொளி'' என்று டாக்டர் ராஸ் கேட்டதற்கு ''கடவுள்தான் அந்த ஒளியாய் இருக்க

வேண்டும். அதன் முன்னிலையில் கருணையும் அன்பும் பிரவகிப்பதை உணர்ந்தேன். அத்துடன் ஐக்கியமாகி விட வேண்டுமென்கிற ஆசை—அங்கேயே அதே நிலையில் இருந்துவிட வேண்டும் என்ற ஆசை—நிறைய இருந்தது. இன்னும் ஒருபடி அருகில் சென்றிருந்தால் நான் மீண்டும் இங்கே திரும்பி இருக்க முடியாது.''

இத்தகைய அனுபவங்கள் நமது பரம்பரை நம்பிக்கைகளுக்கு இசைவாக இருக்கின்றன. அதேபோல் கிறிஸ்தவ மத நம்பிக்கைகளும் மனிதன் சிரஞ்சீவியாய் வாழ்கிறான் என்றுதான் கூறுகின்றன. ஆனால் இந்த அனுபவ உண்மை அனைத்தும் பொதுவாக உலகிற்குப் புதியவை. அவைகளை ஏற்றுக்கொள்வது ஏதோ விஞ்ஞான உலகிற்கு எதிராகச் செல்லும் ஒரு மனோ பாவ தயக்கத்தைப் பலருள் ஏற்படுத்தியது. எனினும், மருத்துவர்கள் பணம் கொடுத்து டாக்டர் ராஸின் பேச்சைக் கேட்டார்கள். அதில் ஏதோ உண்மை இருப்பதுபோல படித்தவர்களுக்குப் பட்டது. அதிர்ச்சியுடனும் அதிசயத்துடனும் இச்செய்தியை மக்கள் படிக்கத் துவங்கினார்கள். சாவு, சாவுக்குப்பின் வாழ்வு என்பதைப்பற்றி எல்லாம் ஒரு குறிப்பிட்ட வகை எண்ணங்களை நாம் வளர்த்துக்கொண்டு வந்திருக்கிறோம். பல ஆண்டுகளாக, பல காலமாக ஆகஅவற்றிற்கு மாறான ஏதும் எந்தப் புதுமையும் நமக்கு அதிர்ச்சியைத்தான் தரும்.

ஆத்மா சிரஞ்சீவித்துவம் கொண்டது என்பது பகவத் கீதையிலிருந்து கிராமப் பெரியவர்கள் வரை ஏற்றுக்கொண்ட உண்மை. நமது ஊரில் ஆத்மா சிரஞ்சீவியாய் வாழ்கிறது என்ற நினைப்புடன்,

"'தெய்வத்திற்குப் படைக்கிறோம்'' என்று நாம் செய்யும் நமது மூதாதையர் வழிபாட்டையும் திதி, திவசம் என்ற பெயரில் செய்யும் சடங்குகளையும், மனிதர்கள் இறக்கும்போது வீட்டில் திருவாசகம் படிப்பதையும் அதிலும் 'விடுதலைப்பத்து' என்ற பாடல்களைச் சாகப் போகிறவர்களுக்கு அருகில் இருந்துகொண்டு படிப்பதையும் கொஞ்சம் எண்ணிப் பாருங்கள்!

# 3. வாழ்வின் பேருண்மைகள்...

ஏன் இதைப்பற்றி இப்பொழுது போய் எழுதுகிறீர்கள் எனப் பல வாசகர்கள் கேட்பது காதில் விழுகிறது. 'டைம்' பத்திரிகை இந்தியாவைப்பற்றி ஒரு முறை எழுதியது. ''ஜீவன்—ஆத்மா பற்றிய சிந்தனையில் தன்னை மறந்த நாடு'' என்று. அப்படி தன்னை மறந்தோர்—அறிவு முதிர்ச்சியால் விளக்கம் பெற்றோர் மற்ற நாடுகளைவிட நம் நாட்டில் அதிகம். ஆனால் பொது மக்களோ—பல்வேறு உபயோகமற்ற, உண்மைக்குப் புறம்பான பழக்க வழக்கங்களிலும் எண்ணங்களிலும் மூழ்கியிருப்பதால் நிகழ்காலத்தையும் உழைப்பையும், மகிழ்வான வாழ்க்கையையும் அமைத்துக் கொள்ள முடியாமல் இங்கே அவதிப்படுகின்றனர்.

அவர்கள் எல்லோருக்கும் இந்த அறிவு பெரிய பாதையைத் திறக்கும். புதிய வழியை—நோக்கைக் காட்டும். தெளிவு கொடுக்கும். அந்தத் தெளிவு நம் அன்றாட வாழ்க்கையை, நிகழ்கால வாழ்க்கையை சிறப்பாக வாழ உதவும் என்ற நம்பிக்கையில் இதை எழுத முன்வந்தேன். மனிதன் அன்றாட வாழ்க்கைப் போராட்டத்தில் ஈடுபடுவதுடன் நில்லாது ''வாழ்க்கை ஏன் அமைந்தது. எதற்காக வாழ்கிறோம், ஏதாவது

அர்த்தம் உண்டா, பொருள் உண்டா இவ்வாழ்வில்?'' என்று ஆராயும்போதும், அறியும்போதும் வாழ்க்கை ஒரு மகோன்னதமான லட்சியத்தை நோக்கிப் போகிறது. இதன் காரணமாகவே இதை மக்கள் முன் வைக்க விரும்பினேன்.

மேலும் இதையெல்லாம் நமது ஞானத் தந்தையர்—மூதாதைகள்—நமக்கு முன் வாழ்ந்த பெரியவர்கள் மிகத் தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கின்றனர். பட்டினத்தாரும் மாணிக்கவாசகரும் ஞானிகள். திருமூலரும் அருணகிரிநாதரும் அந்த மகா ஞானத்தை அடைந்தவர்கள். என்ன ஆயிற்று நம் நாட்டில்? விஷயம் தெரியாதவர்கள் இவற்றை விளக்கப் புகுந்ததன் காரணமாக நாம், கருவை விட்டுவிட்டோம். சடங்கில் மாட்டிக் கொண்டோம். மூலம் எது, சடங்கு எது என்று பிரித்தறியும் அறிவில்லாது பழமை எல்லாம் நம் வாழ்க்கையை திசை திருப்பும் உதவாக்கரை என்ற எண்ணம் மேலோங்கியது. இதன் விளைவாக நமது அற்புதமான பாரம்பரியத்தை, அதன் பயனை நாம் பறிகொடுத்து—அறியாமையினால் அலட்சியப்படுத்தி நிற்கிறோம் இன்று.

காலத்தால். ஒவ்வோர் சமயம், நாடுகள் சிறக்கின்றன. நாடுகள் மீண்டும் பாழடைகின்றன. அதே போல் எண்ணங்கள் சிறக்கின்றன. சில காலங்களில் எண்ணங்கள் தாழ்வுற்று வறுமை மிஞ்சி சிதறிப் போகின்றன. அப்போதெல்லாம் ஒரு பாரதி, ஒரு ராமலிங்கம். ஒரு வ.உ.சி. போன்றோர் தோன்றி ஞான விளக்கேற்ற முயல்கின்றனர். திரைகளைக் கிழித்தெறிந்து தூய ஒளியினைக் காட்ட முயல்கின்றனர்.

நமது தாய் தந்தையரின் நல்ல குணங்களை இழப்பது புத்திசாலித்தனமல்ல. நமது தாய் தந்தையரின் ஞானப் போக்கினைப் புரிந்துகொள்ள மறுப்பது புத்திசாலித்தனமல்ல. ஆயிரம் ஆயிரமாண்டு காலமாக அவர்கள் துளித் துளியாகச் சேர்த்துவைத்த ஞானத் தேனை ஏதோ கருவண்டு சேர்ந்த கசடு என்று ஒதுக்குவது மடமை, அறியாமை.

இந்தக் கட்டுரைத் தொடர் மனித மனத்தின் அசாதாரணத் தன்மையை உணர்த்தும். நமது எண்ணங்கள் சாவதில்லை. மனித மனம் சாவதில்லை என்ற பேருண்மையை நிலைப்படுத்தும். பிரார்த்தனை என்ற பாசக் கயிற்றின் மூலம் யமனைக்கூட—சாவைக் கூட—நாம் வெற்றி காணமுடியும் என்பதைப் புலப்படுத்தும். இவ்வுலகம் சில இயற்கை நியதிகளின்கீழ் இயங்கி வருகிறது; அந்த நியதிகளைப் புரிந்துகொள்வது வாழ்வுக்குப் பயன்தரும் என்பதை உணர்த்தும். இறப்பு—சாவு—என்பது ஒரு மாற்றம் என்பதைத் தெரியப்படுத்தும். புறத்தோற்றம் கொண்ட நம் உடல் ஆத்மாவுக்கு ஒரு வீடு, ஒரு குடில் என்பதை உணரும் போது, நாம் இவ்வுடலை விட்டுவிட்டு உடலில்லாத வேறு இடங்களுக்குக் குடி புகுகிறோம். இறப்பின்போது என்ற அறிவு நமக்கேற்படும்.

வாழ்வு ஒரு தொடர் இயக்கம், உடலமைப்பின் எல்லைக்குள் இயங்குவது, இவ்வுலக வாழ்வு; உடலமைப்பின் எல்லையிலிருந்து விடுபட்டு இயங்குவது இறந்தபின் ஏற்படும் ஆத்ம வாழ்வு.

வாழ்க்கை ஓர் அற்புதமான பள்ளிக்கூடம், நாம் நம்மைப்பற்றியும் இவ்வுலகைப்பற்றியும்—நம் வாழ்வின்

நோக்கம் பற்றியும், இவ்வுலகப் படைப்பின் நோக்கம் பற்றியும் உணர்ந்துகொள்ளும் ஒரு கல்லூரி. இத்தகைய நமது அறிவு நம்மை மேல்நோக்கிச் செலுத்தும். நாம் பிரபஞ்சத்தின் ஒரு பகுதி என்பதை நமக்கு உணர்த்தும்.

இவ்வுலகம் நம்மைப் போன்ற கோடானு கோடி ஆத்மாக்களால் நிறைந்திருக்கிறது. வானில் தெரியும் நட்சத்திரத்திற்கும் பூமியில் விளையும் புல்லுக்கும் நேரடியான—மறைமுகமான—தொடர்பு இருக்கிறது. எல்லாம் இணைந்து வாழப் படைக்கப்பட்டிருக்கின்றன. அதை உணராது போகும்போது நாம் எதிர்ப்புச் சக்திகளில் நம் வாழ்வை வீணாக்குகிறோம். உணரும் போது நாம் எல்லோர்மீதும் அன்பு செலுத்துகிறோம். ஞானிகளின் அன்பு—நமது ஊர்ப்பெரியவர்களின் அன்பு —அத்தகைய அறிவுக் கருவூலத்தின் பிரவாகம்தான்.

அதை உணரும்போது ஆணவம் நம்மிடை எழுவதில்லை. பிறரைக் கெடுக்கும் நோக்கம் நம்மிடை எழுவதில்லை. பிறரை ஏமாற்றும் எண்ணம் நம்முள் எழுவதில்லை. அகங்காரம் போய் எல்லோரையும் மதிக்கும், போற்றும் பண்பு நம்முள் விளைகிறது; வளர்கிறது.

எதை எழுதினாலும் நாடு—தமிழ்நாடு என்ற எண்ணம் என்னுள் எழாமல் இருப்பதில்லை, ஏதோ கேவலம் பதவியைப் பிடித்துவிட வேண்டுமென்று தனக்குச் சாதகமாக உண்மைகளைத் திருப்பி பொய்களைச் சொல்லி, ஆணவத்திலும் பதவி வெறியிலும் இயங்கும் தலைவர்கள் என் கண்முன் வருகிறார்கள். வாழ்வின் பேருண்மைகளைச் சதா நினைவில் கொள்ள வீட்டெதிரே மயானத்தை அமைத்துக் கொண்டால் பொது நன்மைக்காக எல்லாம் இணைந்து இயங்க

வேண்டும். அதுதான் வாழ்க்கைப் பரிணாம வளர்ச்சி, என்று புரிந்து கொண்டால்—ஆணவம் இருக்குமா, பதவி யின் அசைக்கமுடியாத தன்மை இருக்குமா என்பதை யோசித்துப் பாருங்கள்.

எது விதையோ, அது அதற்கேற்ப பலனைத் தருகிறது. ஆணவம் விதையானால், 'சரிவு' அதன் பலன்; கெட்ட எண்ணம் விதையானால், 'துன்பம்' அதன் பலன். அன்பு விதையானால், 'இன்பம்'தான் அதன் பலன். நல்லெண்ணம் விதையானால் நன்மை அதன் பலன்.

நம் நாட்டில் அப்படிப்பட்ட அன்பு கொண்டோர்—மாசற்ற தூய நல்லோர் நம்மிடையே வாழ்ந்தார்கள். அவர்களும் முதல்வர் பதவியை வகித்தார்கள். ஓமந்தூரார் என்ற பெரியவர் உள்ளத்தால், உடலால் தூய நற்செயல்களால் நாட்டுக்கு உழைத்தார். அவரை நமது அரசியல்வாதிகளும், முன்னாள் அமைச்சர்களும், இந்நாள் அமைச்சர்களும் உதாரணமாகக் கொள்வது நல்லது. ஆணவம், திமிர், பதவி வெறி, பொறாமை, கெட்ட எண்ணங்கள் மனித வாழ்வைச் சீரழிக்கின்றன. அப்படிப்பட்டவர்கள் ஆளுங் கட்சியிலோ, எதிர்க்கட்சி யிலோ, இருந்தால் நாடே அவதிப்படுகிறது. இன்றைய பல அரசியல்வாதிகள் இக்கட்டுரைகளைப் படிக்க நேரிடும்போது ஆத்ம சோதனை செய்யக்கூடும் என்ற நல்ல நம்பிக்கையில் இதை எழுதுகிறேன். 'நாட்டுக்கு நல்லது செய்வேன்' என்று துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு தலைவராக, அரசியல்வாதியாக உலவும் அனைவருக்கும் இச்சிந்தனைகள் பயன்படும் என்ற நம்பிக்கையில் இதை எழுதுகிறேன்.

# 4. உடலுக்கும் மனதுக்கும் என்ன உறவு...

பேராசிரியர் மூடி, தத்துவத்தில் டாக்டர் பட்டம் பயின்றவர். சில ஆண்டுகள் கரோலினா பல்கலைக் கழகத்தில் தததுவம், தர்க்கம் போன்ற பாடங்களைப் போதித்தார். பின் மருத்துவம் பயின்றார். ஒரு நல்ல மன சிகிச்சை நிபுணராக ஆக வேண்டுமென்பது அவரது ஆசை.

மருத்துவம் பயின்றபோது, வர்ஜினியா பல்கலைக் கழகத்தில் ஒரு மன சிகிச்சை நிபுணர் பாடஞ் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார். அவர் இரு முறை இரண்டு கண்டங்களில் இறந்து போய்ப் பிழைத்துக் கொண்டார் என்பதை 'மூடி' அறிந்தார். ஒரு சமயம் அந்த மன சிகிச்சை நிபுணர் தன் அனுபவங்களை நேரே 'மூடி'யிடம் கூறினார். நம்பமுடியாத அலுபவம்.

பின் பேராசிரியர் மூடி தன் வகுப்பில் பிளேட்டோ வின் சிரஞ்சீவித்துவம் (Immortality) என்ற பாடத்தைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தார். சாவுக்குப்பின் வாழ்வு இருக்கிறதா என்பதைப் பற்றி மூடி விவாதிக்க வில்லையானாலும், வகுப்பு முடிந்தவுடன் ஒருமாணவர் அவரைப் பார்க்க வந்தார். அவர் தனது பாட்டி

செத்துப் பிழைத்ததையும், அப்போது தன் பாட்டிக் கேற்பட்ட அனுபவங்களைப் பாட்டி விவரித்ததையும் கூறினார். அந்த வர்ணனை, முன்பு மனசிகிச்சை நிபுணர் கூறிய அதே அனுபவம் போலவே இருந்தது. இது டாக்டர் மூடியைச் சிந்திக்க வைத்தது. 'உடல் இயக் கத்தைத் தாண்டி, இறப்பைத் தாண்டி ஆத்மா ஜீவிக் கிறது' என்ற தத்துவரீதியான விசாரணைகளில் அவர் ஈடுபாடு கொண்டார். அதிலிருந்து இப்படி இறந்து பிழைத்தவர்களின் அனுபவங்களை அவர் தொகுத்தார். தொகுத்தபோது எல்லாவற்றிலும் ஒரு பொதுப்படை யான அனுபவம் நிறைந்திருப்பதைக் கண்டார். ஒரு அனுபவம் பொதுப்படையாக, எல்லோருக்கும் ஏற்படும் போது அது உண்மையாயிருக்கக்கூடும். அதுவே உலக நியதியாயிருக்கக்கூடும் என்ற அனுமானம் யாருக்கும் ஏற்படுவது சகஜம். அந்த அனுமானத்திலே, தான் பேட்டி கண்ட பலரது அனுபவங்களைத் தொகுத்து முதன் முதல் அமெரிக்க மருத்துவக் கழக மாநாட்டில் டாக்டர் மூடி பேசினார்.

அப்போது பல மருத்துவர்கள், 'செத்துப் போய், விட்டார்கள்' என்று தாங்கள் நினைத்த நோயாளிகள் பிழைத்து எழுந்ததையும், அவாகள் கூறிய அனுபவங் கள் டாக்டர் மூடி கூறியதைப்போலவே இருந்ததையும் வியப்புடன் தெரிவித்தார்கள்.

புகழ் பெற்ற மற்றொரு டாக்டர் ராஸ், மீள முடியாத நோயினால் வாழ்வின் கடைசிக் கட்டத்தில் இருப்பவர்களுக்கு மருத்துவப் பணி செய்து வந்தார். சாகுந்தறுவாயில் உள்ளவர்களின் அனுபவம், டாக்டர் மூடி கண்டதைப் போல ஒரே விதமாக இருந்தது. "சாவு என்பது என்ன?" உடல் இயக்கங்கள் நிற்கும்போது

எல்லாம் முடிந்து விடுகிறதா?'' என்ற பெரிய கேள்விகளுக்கு டாக்டர் ராஸ் விடை தேடிக் கொண்டிருந்தார்.

இருவரும் தனித்தனியே கண்ட முடிவுகள் எல்லா வகையிலும் ஒத்திருந்தன. ''சாவுக்குப் பின் வாழ்வு இருக்கிறது என்று இரண்டாயிரம் ஆண்டுகளாக நமக்கு போதிக்கப்பட்டு வந்ததில் உண்மை இருக்கிறது என்பது இப்போது தெரிய வருகிறது'' என்கிறார் டாக்டர் ராஸ்.

## இறப்பு என்பதுதான் என்ன?

இறப்பைப் பற்றி பேசவே மனிதர்கள் பயப்படுகிறார்கள். முதன் முறையாக அறுவைக் கூடத்தில் பிணத்தைப் பார்க்கும் மருத்துவ மாணவர்கள் கூட பேரதிர்ச்சிக்கு ஆளாகிறார்கள். இது எல்லோருக்கும் நேரக்கூடியதுதான் என்றாலும், அது நம்முள் பயத்தை எழுப்புகிறது. 'நமக்கு' என்பதுடன் எண்ணங்களை இணைத்துப் பார்க்கும்போது ஒருவகை அச்சம்-சோகம் எழுகிறது.

''அதற்குப் பின் என்ன?'' என்ற புதியது காணும் பயம்; நமக்குத் தெரிந்த இடம், மனிதர்கள், வீடு, வாசல், சுகம் என்ற இவற்றிலிருந்து நாம் அப்புறப் படுத்தப்படுகிறோம் என்பதில் ஏற்படும் அச்சம், இறந்தவர்களின் அடக்கத்திற்கு போய் வரும்பொழுது ஒரு விரக்தி எழுகிறது. தமிழிலே அழகாக அதை 'மயான வைராக்கியம்' என்று கூறுகிறோம். நாம் பயப்படுவதால், சாவு நம்மிடம் கருணை காட்டுவதில்லை. நாம் அஞ்சுகிறோம் என்பதற்காக உண்மையிலிருந்து நாம் தப்பிக்க முடியாது.

எந்த விஷயமும், நமக்கு அதைப் பற்றிய பூரா விஷயங்களும், தெரியாதவரை, அச்சத்தையும், கலவரத்தையும் நம்மிடம் அது உண்டு பண்ணும். அறியாமை தான் பயத்தின் பிறப்பிடம். கொஞ்சம் கொஞ்சமாக ஒரு விஷயத்தைப் பற்றித் தெரிந்துகொள்ளும்போது அச்சம் போய், ஒருவித 'பழகிய' உறவு நம்முள் எழுகிறது. சாவு ஒரு நிச்சயமான முடிவாயிருக்கும்போது ஏன் நாம் அதைப் பற்றிச் சிந்திக்காமலும், பேசாமலும் தப்பிக்க வேண்டும்? அது பற்றி எல்லாவற்றையும் தெரிந்து கொண்டு அதை வரவேற்க கற்றுக் கொள்வது புத்திசாலித்தனமாகும்.

## இறப்பின் போது என்ன நேரிடுகிறது?

உடல் இயக்கம் நின்று போகிறது; பேச்சில்லை மூச்சில்லை; இதயத்துடிப்பு நின்றுவிடுகிறது. ரத்த அழுத்தம் விழுந்துவிடுகிறது. வெளி உலக நினைவு இல்லாது போவதாக நாம் எண்ணி வருகிறோம்.

சாகுந்தறுவாயில் இருந்து, மருத்துவச் சோதனைகள் மூலம் இறந்துவிட்டதாகக் கருதப்பட்டவர்கள், அதிசயமாகப் பல சமயம் பல இடங்களில் மீண்டும் உயிர் பெற்றிருக்கிறார்கள். அவர்கள் கூறும் அனுபவத்தை ஆராயும்போது வெளிப்படும் உண்மை: இறப்பு என்பது உடலிலிருந்து மனம் பிரியும் நிலை; சுமார் மூன்று நிமிடங்களிலிருந்து அதிகப்படியாக அரைமணி நேரம் வரை மனிதர்கள் உணர்வற்ற நிலையில் இருக்கிறார்கள்; எனினும் அவர்களின் கண்கள் மூடியிருந்தாலும், மூளையில் மின் இயக்கம் இல்லாதிருந்தாலும், நடக்கும் எல்லாவற்றையும் பார்க்க முடிகிறது, கேட்க முடிகிறது.

# 5 அனுபவங்கள்

கான்சாஸ் மாநிலத்து டொபிகாவைச் சேர்ந்த டாக்டர் டுவெம்லோ தன்னைச் சோதனைக்குட்படுத்திக் கொண்டார். நினைவிழக்கக்கூடிய சில மருந்துகளை உட்செலுத்தினார். தனக்கேற்பட்ட அனுபவத்தை அவரே விவரிக்கிறார்: "மனம் உடலிலிருந்து விடுதலை பெற்றது. ஏதோ இருண்ட பாதாள குகைவழியே பயணம் செய்வது போல் இருக்கிறது. நான் வேலை பார்க்கும் மாநிலத்திலிருந்து என் குடும்பம் வசிக்கும் மாநிலத்திற்குக் கண நேரத்தில் போனேன். என் வீட்டில் என் மனைவி தண்ணீர் குடிக்க எழுந்தாள். பின் சோபா வில் அமர்ந்தாள். நான் என்னையே போய் வீட்டுக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டேன். உருவம் தெரிய வில்லை.

சில நாள் கழித்து ஊருக்குப் போனபோது அவர் மனைவி சொன்னாள்: 'இரண்டு நாளைக்கு முன்பு மத்தியான நேரம் தண்ணீர் குடிக்க அடுப்பங்கரைக்குப் போனேன். யாரோ என்னைத் தொடர்ந்ததுபோல எனக்கு ஒரு உணர்ச்சி ஏற்பட்டது' என்று.

இந்தச் சம்பவத்தை எழுதுவதன் மூலம் இதில் உண்மை இருக்கிறது என்றோ, யாரையும் நம்புமாறோ நான் கூறவில்லை. நமது அறிவுக்குப் புலனாகாத பல

விஷயங்கள் இருக்கின்றன. எல்லாவற்றையும் கடைந்தெடுத்து எல்லா உண்மைகளையும் விஞ்ஞானிகள் இது வரை கண்டுபிடித்து விடவில்லை. அறிவு, நாளும் முன்னேறிக் கொண்டிருக்கிறது. புதிய விஷயங்கள் புதிய அனுபவங்கள் நாளும் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. நாம் அதைத் தெரிந்துகொள்வது நல்லது என்ற நோக்கில்தான் இக்கட்டுரை எழுதப்படுகிறது.

நாம் இன்று தர்க்கரீதியிலும், விஞ்ஞான ரீதியிலும் விஷயங்களை அணுகுகிறோம்.

தர்க்கத்திற்கு அப்பால் சில உண்மைகள் தனித்து நிற்கின்றன. அதுபோல விஞ்ஞான ரீதியில் எல்லாவற்றையும் நிரூபித்துவிடும் வழிமுறைகள்கூட நம்மால் இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை. கண்டுபிடிக்க முடியவில்லை.

விஞ்ஞானி நியூட்டன் கூறினார்: "எனக்கெதிரே கண்டுபிடிக்கப்படாத உண்மைகள் சமுத்திரம்போல் இருக்கின்றன. நானோ கடற்கரை அருகில் சில கிளிஞ்சல்களைப் பொறுக்கிக் கொண்டிருக்கிறேன்." உலகப் புகழ்பெற்ற விஞ்ஞானி ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் கூறினார்: "நான் கண்டுபிடித்த இரண்டு பெருவிஞ்ஞான உண்மைகளும் என் ஆழ்மனத்தின் மூலம் கிடைத்தன."

விஞ்ஞானத்தின் எல்லைக்குப் போய் அணுவுக்குள் அணுவாக ஆராய்ந்து, சிறியதற்கும் சிறியதாய்ப் போகும் போதும் வானவெளியில் நின்று பெரியதற்கும் பெரியதாய் இருக்கும் நட்சத்திரங்களையும் கோளங்களையும் ஆராயும் போதும், மனித மனத்திற்குள் அடக்கமுடியாத, பெரும் பிரபஞ்சம் கண்முன் விரிவதை விஞ்ஞானிகள் அடிக்கடி எழுதுகின்றனர். கண்டு புல்லரித்துப் போகின்றனர்.

விஞ்ஞானம் கடந்த முந்நூறு ஆண்டுகளாக வளர்க்கப்பட்ட அறிவு. அனுபவ அறிவு. முதல் மனிதன் தோன்றியதிலிருந்து வளர்ந்த அறிவு.

பேராசிரியர் மூடி சுமார் 150 பேர்களைப் பேட்டி கண்டார். நேரடி அனுபவமும் இத்தகைய அனுபவங் களைக் கேட்ட மூன்றாவது மனிதர் மூலமும் அவர் கேட்டார். அவற்றில் நேரடி அனுபவமான சுமார் 50 பேர்களது விளக்கங்களை அவர் ஆராய்ந்தார்.

அதில் பலர் மீளாத நோயில் மருத்துவமனையில் இருந்தவர்கள். பலர் கார் விபத்து, தீ விபத்து போன்றவைகளில் அடிபட்டுப் பிழைத்தவர்கள். சிலர் இதயநோய் வந்து மூச்சு நின்று மீண்டும் பிழைத்துக் கொண்டவர்கள். அவர்கள் பல்வேறு வயதினர். பல்வேறு நம்பிக்கை கொண்டவர்கள்.

இவர்களது அனுபவங்களைப் பாகுபடுத்தினால் சில விஷயங்கள் நமக்குப் புலனாகின்றன.

விளக்க முடியாத நிலை: "நான் நினைவிழந்த போது எனக்கு ஏற்பட்ட அனுபவத்தை எப்படிச் சொல் வது? அதை விளக்குவதற்கு வார்த்தைகளில்லை. நாம் நீள அகல உயரம் என்ற மூன்று பரிமாணங்களில் வாழ் கிறோம். அந்த உலகில் வேறோர் பரிமாணம் இருக் கிறது."

நினைவிழந்த நிலையில் நடந்த எல்லாவற்றையும் ஒரு விவரம் விடாமல் 'இறந்தவர்கள்' பின்னால் வருணித்தார்கள். மருத்துவர்களும், உதவியாளர்களும் பேசிக்கொண்ட ஒவ்வொரு சொல்லையும் அவர்களது ஒவ்வொரு செயலையும் அப்படியே நோயாளிகள் பின்னால் விவரித்தார்கள்.

ஒரு பெண்மணி கூறுகிறார்: "நான் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டேன். என்ன நோய் என்று மருத்துவர்களால் கணிக்க முடியவில்லை. எனது கல்லீரலை எக்ஸ்ரே எடுக்க என்னை அழைத்துச் சென்றார்கள். சிறிதளவு மருந்தை உடலில் ஏற்றி உடல் எதிர்க்கிறதா அல்லது ஏற்றுக்கொள்கிறதா எனச் சோதித்தார்கள். ஒன்றும் நேரவில்லை. ஆனால் பல மருந்துகள் என் உடலுக்கு ஒத்துக்கொள்ளவில்லை. பின் முழு அளவு மருந்து கொடுத்தபோது நான் நினைவிழந்தேன். உதவியாளர் டெலிபோனில் அலறினார்: "டாக்டர் ஜேம்ஸ், உங்கள் நோயாளியை நான் கொன்றுவிட்டேன்" என்று; நான் சாகவில்லை என்பது எனக்குத் தெரியும். எழுந்து 'நான் சாகவில்லை' என்று சொல்ல விரும்பினேன். முடியவில்லை. எல்லோருமாக எனக்கு மூச்சு வர சில மருந்துகளை மேலும் செலுத்தினார்கள். அந்த ஊசிகள் என்னிடம் எந்த உணர்வையும் ஏற்படுத்தவில்லை."

**மற்றோர் இதய நோயுடையவர் கூறுகிறார்:**

"மார்பு வலி அதிகமாயிருந்தது. உதவிக்கு என் கணவர் ஓடி வந்தார். எல்லாம் கறுப்பாக இருந்தது. என் கணவர் கூறியது காதில் விழுந்தது. 'இந்தத் தடவை அவ்வளவுதான்" என்று. என் எண்ணமும், 'அவ்வளவுதான். இதுவே கடைசி' என்று ஓடியது."

கார் விபத்தில் சிக்கியவர் நினைவிழந்து பின், நினைவுக்கு வந்தபின் கூறுகிறார்: 'செத்து'ப்போய் விட்டானா?' என்று கேட்கிறார்கள். ஒருவர் கூறுகிறார். "ஆமாம் செத்துப்போய் விட்டான்" என்று.

அருகிலிருந்தவர்கள் என்ன பேசிக் கொண்டார்கள். எப்படி நடந்துகொண்டார்கள் என்பதை நினைவிழந்தவர்கள் தெள்ளத்தெளியக் கூறினார்கள்.

அடுத்ததாக, அவர்கள் அனுபவித்த உணர்வுகள் அமைதியும், நிம்மதியும், மகிழ்வும்தான்.

தலைக் காயத்தில் நினைவிழந்த ஒருவர் பின்னால் கூறினார்: ''ஒரு கணம் பலத்த வலி தெரிந்தது. அடுத்து வலி அடியோடு இல்லை. எங்கோ இருட்டில் மிதக்கிறேன். உடம்பெல்லாம் கதகதப்பாக இருக்கிறது. சுகமான இதமான உணர்வில் இருக்கிறேன்.''

ஒரு பெண்மணி கூறுகிறார்: ''என் துன்பமெல்லாம், கஷ்டமெல்லாம் போய்விட்டதைப்போல் உணர்ந்தேன். ஒரு அமைதி—ஒரு நிம்மதி என்னை ஆட்கொண்டது.''

வியட்நாம் போரில் 'இறந்த' ஒருவர் கூறுகிறார்: ''ஒரு விடுதலை பெற்ற உணர்வு. வலியெல்லாம் போய் விட்டது. களைப்பு நீங்கிய நிலை. எல்லாம் எங்கும் சுகமாக இருப்பது போன்ற உணர்வு.''

அவர்கள் அனுபவித்த மற்றோர் உணர்வு காதில் ஏற்பட்ட ஒரு தொடர்ந்த ரீங்காரம், அலை ஓசை போல தொடர்ந்த மணி நாதம் போல காதில் ஒலித்ததாகக் கூறினார்கள். ஒரு பெண்மணி, ''ஒரு அற்புதமான இசையைக் கேட்டேன். மிக இனிமையான இசை; ராஜ கம்பீரம் கொண்ட இசை என் காதில் ஒலித்தது'' என்கிறார்.

அடுத்தடுத்து மேலும் அவர்களது அனுபவங்களை யும் அதனால் ஏற்பட்ட பலன்களையும் காண்போம்.

# 6. அறிவான தெய்வமே தேஜோமயானந்தமே!

இறந்துபோனவர்கள் ஆவி ரூபத்தில் வருவதா? ஆவி ரூபத்தில் உலவுவதா? அப்படியானால் பேய், பிசாசுகள் தேவதைகள் எல்லாம் உண்டு அங்கே என்று சொல் கிறார்களே அதெல்லாம் உண்மைதானா? இறந்தவர்கள் தங்களது உலக பந்தம் விடாதபோது இந்த உலகிலே ஆவி ரூபத்தில் சுற்றிக் கொண்டிருப்பார்கள் என்று மத சம்பந்தமான நூல்கள் கூறுகின்றன. பல மனோ தத்துவ நிபுணர்கள் இதை மனப்பிரமை என்கின்றனர்.

அவ்வப்போது இறந்தவர்களைச் சந்தித்ததாக, கண்டதாக, பேசியதாக, அவர்கள் கூறிய விஷயங்கள் சரியாக இருந்ததாகப் பல செய்திகள் வருகின்றன. சில ஆண்டுகளுக்குமுன் 'ரீடர்ஸ் டைஜஸ்'டில் கிளாடியா கார்டினேல் என்ற இத்தாலிய நடிகை தனக்கேற்பட்ட அனுபவத்தைப் பற்றி எழுதியிருந்தார். கணவனும் மனைவியும் ஒரு வீட்டை வாங்கி அதற்குக் குடி போகி றார்கள். ஒவ்வோர் இரவும், முதல் மாடியில் நாற்காலி கள் நகர்த்தப்படும் சப்தம் கேட்கிறது; மின்விளக்கு எரிகிறது. மேலே சென்றால் யாரோ அருகில் உலவுவது போன்ற உணர்வு ஏற்படுகிறது என்று அவர் எழுது

கிறார். கடைசியில் சில 'அதீத மன' சக்தி கொண்டவர்களை வீட்டுக்கு அழைத்து வந்தபோது அவர்கள் ஒவ்வொருவரும், தனித்தனியே அங்கே இரவு வேளைகளில் ஒரு டாக்டரின் ஆவி உலவுவதாகக் கூறினார்கள். விசாரித்ததில் அங்கு முன்பு ஒரு டாக்டர் குடியிருந்து இறந்து போனதாகக் கூறினார்கள்.

இதுபோன்ற ஏராளமான சம்பவங்கள் உலகெங்கும் எல்லாக் காலங்களிலும், எல்லா இன மக்களாலும் பேசப்படுகின்றன. நம்பப்படுகின்றன. அமெரிக்க இந்தியர்களிலிருந்து எகிப்து நாட்டு மக்கள் வரை முன்னோர் இறந்து புதைக்கப்பட்ட இடங்களை 'புனித' இடங்களாக—அவர்கள் ஆவி உலவும் இடங்களாகக் கருதுகின்றனர்.

ஆனால் இப்போதோ அமெரிக்காவில் டாக்டர் மூடியும் மற்றும் பல பல்கலைக் கழக மருத்துவர்களும், இறந்து போனதாய்க் கைவிடப்பட்டு பிழைத்துக் கொண்டவர்களைக் கேட்கிறார்கள். ''பிழைத்தவர்கள்'' கூறுகிறார்கள்:

'ஆவி ரூபத்தில் என் தாயைக் கண்டேன். தந்தையைக் கண்டேன். அவர்கள் இங்கே இருக்கிறார்கள். நான் அவர்களுடன் பேசினேன்' என்றெல்லாம். இப்படித் தங்கள் அனுபவத்தைக் கூறுபவர்களில் பலர், கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள். பலர் இளைஞர்கள். இப்படிப் பலதரப்பட்ட மக்களும் தனிப்பட்ட முறையில் ஒரே வகையான அனுபவத்தை அனுபவிக்கிறார்கள் என்றால், எல்லோருக்கும் மனப் பிரமை என்று எடுத்துக் கொள்வதா? அல்லது அதில் ஏதோ உண்மை இருக்கக் கூடும் என்று நம்புவதா?

எல்லோரும் ஏகோபித்துத் தாங்கள் அனுபவித்த மகத்தான அதிசயமாகக் கூறியது, அவர்கள் கண்ட 'பேரொளி' பற்றி! அந்தப் பேரொளி மங்கலாகத் துவங்கிப் பேரொளியாக உருவெடுக்கிறது. எனினும் கண்ணைப் பறிக்கவில்லை. அது ஒரு தண்ணொளி. எல்லாவற்றையும் தன் வசம் கவரும் பேரொளி. அன்பும் கருணையும் பொங்கிப் பிரவகிக்கும் பேரொளி. அதைக் கண்டதும் மனம் பெரிய நிம்மதியை அடைந்ததாகக் கூறினார்கள். மனத்தில் மட்டற்ற மகிழ்ச்சி ததும்பிய தாகக் கூறினார்கள்; அங்கேயே அப்பேரொளியின் அருகில் இருந்துவிட வேண்டுமென்ற பேரவா, தங்களை ஆட்கொண்டதாகக் கூறினார்கள்.

என்ன இந்தப் பேரொளி? அது ஒரு பொருளல்ல—சூரியனைப்போல உயிரற்ற பொருளல்ல—என்று கூறினார்கள். அதிலிருந்து மனித உணர்வுகள் புறப்பட்டதாகக் கூறினார்கள். பூரணத்வம் பெற்ற மகா அறிவு என்று அதை வருணித்தார்கள். எல்லாவற்றையும் உணரும் பூரணஞானம் என்று கூறிப் புல்லரித்தார்கள்.

அந்தப் பேரொளியை அந்தப் பெரு மகிழ்வை வேறு யாராவது கண்டிருக்கிறார்களா எனப் பார்க்கலாம். யோகமுறையைப் பயிலும் ஹார்வர்டு பல்கலைக் கழக மருத்துவர்களிலிருந்து அதை அமெரிக்கர்களுக்குப் புரியும் வகையில் போதித்த மகரிஷி மகேஷ் யோகிவரை கண்ணை மூடி, மனத்தை ஒருமுகப்படுத்தினால் ஒரு பேரொளி தெரிவதாகவும்-அது உள்ளத்தையும் உடலையும் மகிழ்ச்சி வெள்ளத்தில் திளைக்க வைக்கிறது என்றும் கூறுகிறார்கள்.

இதைத்தான்.

'கிழக்கு வெளுத்தது; கருணை அருட்சோதி உதயம் கிடைத்தது
எனது உள்ளக் கமலம் கிளர்ந்தது'

என்று உலகின் பரம்பொருளை அருட்பெரும் சோதியாக ஞான வள்ளலார் கண்டாரோ? 'அறிவின் வழியாக அறிவை அறியும்போது அனுபவமாக அங்கே விரிவது என்ன?' என்ற கேள்வியை வடலூர் ராமலிங்கனார் எழுப்புகின்றனர். அந்த வடலூராரின் அனுபவம் கண்ட பெருஞ்சோதியைத்தான் எல்லோரும் காண்கிறார்களா?

மகரிஷி மகேஷ் யோகி கூறுகிறார், "கண்களை மூடி எண்ணங்களை ஒருமுகப்படுத்தினால், நெற்றிக்கு முன் ஓர் ஒளி தெரியும்" என்று. எப்போதோ வாழ்ந்த பத்திரகிரியார் பாடுகிறார்:

"உற்று உற்றுப் பார்க்க ஒளிதரும் ஆனந்தம் அதை
நெற்றிக்கு நேர்கண்டு நினைத்திருப்பது எக்காலம்?"

தாயுமானவர் கூறுகிறார்:

"என் சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே,
தேசோ மயானந்தமே!"

திருமூலர் கூறுகிறார்:

"தன்னை யறிய தனக்கொரு கேடில்லை
தன்னை யறியாமல் (மனிதன்) தானே கெடுகின்றான்
தன்னை அறியும் அறிவை அறிந்தபின்
தன்னையே அர்ச்சிக்கத் தான் இருந்தானே'

எல்லா சமயப் பெரியார்களும் கண்ட அந்த உண்மையை—அந்தப் பேரொளியைத்தான் செத்துப் பிழைத்தவர்கள் கண்டுவந்ததாகக் கூறுகிறார்களா?

டாக்டர் மூடியிடம், அவர்கள் தாங்கள் பெற்ற அனுபவங்களைக் கூறுகிறார்கள்: "அந்தப் பேரொளியை எப்படி வருணிப்பதென்று தெரியவில்லை. அதனிடமிருந்து அன்பும் கருணையும் பொங்கிப் பிரவகித்து, என்னை ஆட்கொள்ளுகிறது; அங்கே குரல் இல்லை; மொழி இல்லை; எண்ணங்களை உணரும் உணர்வு மட்டுமே எஞ்சியிருக்கிறது"

"அந்தப் பெரொளி ஏதோ ஒரு வகையில் கேட்கிறது; 'நீ சாவதற்குத் தயாரா? வாழ்ந்தது போதுமா? செய்ய வேண்டியதை எல்லாம் செய்துவிட்டாயா?' என."

ஒரு பெண்மணி தன் அனுபவத்தைக் கூறுகிறார்:

"'இங்கு வர உன்னைத் தயார் செய்து கொண்டாயா? வாழ்ந்தது பற்றி—உன் சாதனைகள் பற்றி உனக்குத் திருப்தி தானே?' என்று அப்பேரொளி கேட்டது!"

மற்றொருவர் கூறுகிறார்: 'வாழ்க்கையில் பட்ட சிரமங்களுக்குப் பலன் இருந்ததாக நினைக்கிறாயா' என்று கேட்டது. அக் கேள்வியில் கண்டனம் இல்லை, அதிகாரம் இல்லை, மிரட்டல் இல்லை. அன்பும் அரவணைப்பும் அக் கேள்வியில் தொனித்தது. நம் வாழ்க்கையைப் பற்றி நாமே சிந்திக்க வைக்கும் முயற்சி அது. வாழ்ந்து வந்த விதத்தை ஒருமுறை பின்னோக்கிப் பார்க்கத் தரும் சந்தர்ப்பம் அது. நம்மிடமிருந்து எல்லாவற்றையும் தெரிந்து கொண்டுவிட கேட்கப்படும் கேள்வி அல்ல அது. உண்மை வழியே நாம் நடக்க உதவும் வகையில், நம்மை சிந்திக்கவைக்கும் வகையில் கேட்கப்படும் கேள்வி. அது தனி உலகம்!'

# 7. "வாழ்க்கைப் பேரேடு"

இறப்பு நிலையை அனுபவித்து மீண்டவர்கள் கூறும் அனுபவங்கள் நம்முள் புதிய சிந்தனைகளைத் தூண்டு கின்றன. வாழ்வு ஒரு தொடர் முயற்சி என்ற எண்ணத்தை ஏற்படுத்துகின்றன. நல்ல படிப்பினையைப் பெறவும் வாழ்வில் பிறருக்கு உதவவும் இவ்வுலக வாழ்க்கை ஒரு வாய்ப்பு என்பதை நமக்குக் காட்டுகிறது. நமக்கு மேற்பட்ட ஒரு சக்தி—ஒரு மாபெருஞ்சக்தி— நடக்கும் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருக் கிறது. பார்த்த நிலையில் 'அறிதுயில்' கொண்டிருக் கிறது என்பதை உணர்கிறோம். நமக்கு மேற்பட்ட சக்தி ஒரு பொல்லாத சக்தியல்ல, நமக்கு வாழ்வளிக்கும் சக்தி. நம்மீது அன்பு காட்டும் சக்தி. நம்மைப் பாதுகாக்கும் சக்தி என்பதை அறிய நமக்கு ஒரு நம்பிக்கை ஏற்படு கிறது.

நமது அனுபவங்களின் மீதுதான் அறிவு வளர்கிறது என்றால் நாம் பெறும் அறிவு மிகமிகச் சிறிய அளவே இருக்கும். நமது அறிவு பிறரது அனுபவங்களாலும், நமக்கு முன் வாழ்ந்த முன்னோர்கள் விட்டுப் போனதி லிருந்தும், அவர்கள் தந்துவிட்டுப் போன பாரம்பரியத் தொடர்பிலிருந்தும் பெறப்படுகிறது. ஆகவேதான் சுய அனுபவத்தை மட்டுமே நம்பி எதையும் எடை

போடாமல், ஒரு பரந்த அடிப்படையில் நாம் வாழக் கற்றுக்கொள்ள வேண்டும்; வாழ முயல வேண்டும்.

செத்துப் பிழைத்தவர்கள் ஒரு பேரொளியைக் கண்டதாகக் கூறினார்கள். அடுத்து அவர்கள் தங்களது கடந்த கால வாழ்க்கை கண் முன் விரிந்ததாகக் கூறினார்கள். "அந்தப் பேரொளியின் முன் நான் நிற்கிறேன். நான் பேசவில்லை. எண்ணங்கள் என் மனத்தில் பதிவாகின்றன. புரிந்துகொள்கிறேன்! 'உன்வாழ்வு பயனுடையதாய் இருந்ததா?' என்ற கேள்வி வந்தபோது நான் என்னைப் பற்றியே சிந்திக்கிறேன்.

"கடந்த காலம் ஒரு சினிமாச்சுருள் போல கண நேரத்தில் என் கண்முன் விரிகிறது. குழந்தைப் பருவத்திலிருந்து நிகழ்ந்த முக்கிய நிகழ்ச்சிகள்— என் வாழ்வின் உச்ச நிகழ்ச்சிகள்-தெரிகின்றன. என் தவறுகள் எனக்குப் புரிகின்றன. ஏதும் கண்டனம் இல்லை. இதிலிருந்து படிப்பினையைப் பெற்றாயா? அடுத்த முறை இது உனக்கு உதவுமா என்று எல்லா விஷயங்களையும் அந்தப் பேரறிவு எனக்கு உணர்த்தியதாகப்பட்டது.

"வாழ்வின் அடிப்படையில் இரண்டு விஷயங்கள் முக்கியம் பெறுகின்றன. இந்த வாழ்க்கை, இந்த வாழ்வு அனுபவங்கள், சம்பவங்கள் அனைத்தும் எனக்கு ஒரு அறிவுப் பயிற்சிக்கான நிகழ்ச்சிகள்; நான் முன்னேற உதவும் படிகள் என்ற உணர்வு. இரண்டாவதாக அந்தப் பேரறிவு எனக்கு உணர்த்தியது அன்பு பற்றி. அன்பு... அன்பு. அந்த ஒரே வார்த்தைதான் வாழ்வின் தாத்பரியமாக எனக்குத் தெரிந்தது. நான் பிறருக்கு உதவ வேண்டும். அதுதான் வாழ்க்கையின் பயன் என்பதை அப்போது நன்கு உணர்ந்தேன்."

''நான் சிறு பெண்ணாக, விளையாட்டுச் சிறுமியாக பள்ளி மாணவியாக, அக்காளுடன் சண்டை போடுபவளாக, படித்து முடித்தவளாக, குடும்பத் தலைவியாக—எல்லாச் சம்பவங்களும் என் கண் முன் விரிகின்றன, அவை அலசப்படுகின்றன. நான் செய்த தவறுகள் எனது முன்னேற்றத்திற்காகத் தெளிவுபடுத்தப்படுகின்றன.''

அவர்கள் அனைவரும் தாங்கள் கண்ட பேருண்மையாகத் தெரிவித்த விஷயங்கள் இரண்டு: (1) அன்பு (2) அறிவு. வாழ்வு ஒரு தொடர்ந்த அறிவு பெறும் முயற்சி என்பதும், நாம் அன்பு காட்டி வாழ்வதன் மூலம் பயனடையலாம் என்பதும்தான் செத்துப் பிழைத்தவர்கள் உணர்ந்து கொண்ட விஷயங்கள்.

வள்ளுவர் கடவுளை 'வாலறிவன்' என்று—'தூய அறிவினன்' என்று கூறினார். பரிணாம வளர்ச்சியின் முடிவு தூய அறிவினனாவதுதானா? 'அன்பே கடவுள்' என்று சொல்லாத மதங்கள் இல்லை. அந்த அன்பின் இணைப்பில்தான் இந்தப் பிரபஞ்சம் இயங்குகிறதா? ஒரு குறிப்பிட்ட அளவிற்கு அப்பால் விஞ்ஞானம் நம்முடன் துணை வருவதில்லை. நாம் நம் சொந்த அனுமானங்களுடனே, நமது எண்ணங்களின் நீட்டத்திலே வாழ்வுப் பயணத்தைத் தொடங்க—தொடர வேண்டியிருக்கிறது.

ஒரு விபத்தில் சிக்கிய மனிதர் தன் அனுபவத்தைக் கூறுகிறார்: ''ஒரு கண நேரத்தில் வாழ்க்கைப் பேரேட்டைப் பின்னோக்கிப் பார்க்கிறேன். என் பெற்றோர் என் கண்முன் வருகிறார்கள், ஏன் இப்படி அவர்களுடன் நடந்து கொண்டோம் என்று வருத்தப் பட்டேன். மீண்டும் வாழ்ந்து திருத்திவிட முடியாதா?

தவறுகளுக்குப் பிராயச் சித்தம் செய்துவிட முடியாதா என்ற தாபம் என்னுள் எழுந்தது...''

இந்த 'இறந்த'வர்களின் அனுபவங்களிலிருந்து நாம் என்ன பெறுகிறோம்? இவ்வுலகில் வாழும் போதே நம் எண்ணங்களையும் செயல்களையும் கடந்த கால சம்ப வங்களையும் நாம் சற்றுத் திரும்பிப் பார்ப்பது நல்லது என்று புலப்படுகிறது. அகங்காரம், மமதை, பொறாமை, காமம், பேராசை, கோபம் என்று எத்தனை பேர்களை மிதித்திருக்கிறோம் என்பதை உணரும்போது, அந்த அறிவு எதிர்கால வாழ்க்கைக்கு வழிகாட்டியாய் உதவக் கூடும்.

''நான் யார்?'' ''கடந்த காலத்தில் பெருமைப்படும் படி நான் என்ன செய்தேன்? என்று நம்மை நாமே சுய சோதனை செய்யும்போது. ''ஏன் பிறந்தோம்?'' என்ப தற்கான பதில்கள், உண்மைகள்—நம் கண்முன் தெரி கின்றன.

டாக்டர் மூடி, டாக்டர் குப்ளர்ராஸ் போன்றோர் களது இந்த ஆராய்ச்சிகள் என் மனத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தபோது, எனது நண்பர் டாக்டர் பரஞ் சோதியை நான் டேக்சாசில் சந்தித்தேன். டாக்டர் பரஞ்சோதி ஒரு மருத்துவர் என்றாலும் அவரை ஒரு தத்துவ ஞானியாக நான் கருதுவதுண்டு.

ஒரு சமயம் அவர் கூறினார்: ஆன்மா செத்துப் போகிறது என்று சொல்கிறார்களே, எங்கே செத்துப் போகிறது? DNA மூலம் உயிருக்கு உயிர் தொடர்பு போய்க் கொண்டே இருக்கிறது சாவதில்லை. இந்த உயிர்த் தொடர்பு பிற உயிர்களுடன் ஒரு இணைப்பைக் கொண்டது. அதுபோல சடப் பொருள்களுடனும்

இணைப்பைக் கொண்டது. இதில் எது சாகிறது என்று கேட்கிறேன்? வேறு ஒரு அனுபவ நிலைக்குப் போகிறது என்று சொல்லலாமே ஒழிய, சாகிறது என்று எப்படிக் கூறுவது?

''சமீபத்தில் ஒரு புத்தகம் படித்தேன். அதில் 'Wisdom of the body' என்பது பற்றி ஒரு மருத்துவர் எழுதியிருந்தார். அதாவது உடம்புக்கு, அதற்குத்தானே ஓர் அறிவு இருக்கிறதாம். உடம்பிற்குத் தண்ணீர் தேவைப்படும்போது தாகமெடுக்கிறது. நெருக்கடிகளை சமாளிக்க முடியாதபடி தலைவலி எடுக்கிறது. உடல் ஓய்வு தேவைப்படும்போது தூக்கம் வருகிறது. உடலுக்கு உப்புக் குறைவு ஏற்படும்போது, 'உப்பாகத் தின்றால் தேவலாம்' போன்ற உணர்வு... இப்படி எழுதிக் கொண்டே போகிறார் அந்த மருத்துவர்.

''நம் உடம்பிலுள்ள ஒவ்வொரு செல்லுக்கும் அறிவு இருக்கிறது என்று எங்கோ படித்தேன்'' என்று கூறி அண்ணாந்து பார்க்கிறார் பரஞ்சோதி.

பரஞ்சோதி என்னை விட்டுவிட்டு எங்கோ போய் விட்டார். ''என்ன சொல்கிறீர்கள்?'' என்று அவர் முகத்தைப் பார்த்துக் கேட்கிறேன்.

''எல்லாவற்றையும் தெரிந்து கொள்ள இந்த நூல் வாழ்க்கை போதாது!'' என்று கூறிக்கொண்டே நடக்கிறார். நானும் அவருடன் நடக்கிறேன் சிந்தித்தவாறே.

# 8. டாக்டர் பரஞ்சோதி தந்த விளக்கம்

''அவர்கள் சொல்வதைக் கவனியுங்கள்'' என்றார் டாக்டர் பரஞ்சோதி. நான் அந்தப் புத்தகத்தை மேலும் படித்தேன்.

''நல்ல ஜுரம் எனக்கு. டாக்டர்கள் நான் பிழைக்க மாட்டேன் என்று கூறுகிறார்கள். நான் நினைவிழந்தேன். செத்துக் கொண்டிருக்கிறேன் என்பது புரிகிறது. ஒரு இருண்ட குகை வழியே போகிறேன். என் வாழ்க்கைச் சரித்திரம் பின்னோக்கி ஓடுகிறது. சில காரியங்களை எண்ணி ஏன் செய்தோம் என்று வருந்துகிறேன். சாவு அருகில் இருப்பதுபோல் இருக்கிறது. நான் சாக விரும்பவில்லை. பல காரியங்களை இன்னும் முடிக்கவில்லை. முடிக்காமல் போகிறோமே என்ற கவலை. நாம் போய்விட்டால் குடும்பம் என்ன செய்யும் என்ற கவலை. 'வேலைகளை முடித்துவிட்டு வா' என்று யாரோ சொல்கிறார் போல இருக்கிறது. நான் உடலில் புகுகிறேன். டாக்டர் 'இனி கவலை இல்லை' என்று கூறுகிறார்.''

டாக்டர் பரஞ்சோதி கூறுகிறார்: ''ஆசைகளைத் துறந்துவிடு என்றார் புத்தர். ஆசைகளே பந்தங்களுக்குக்

காரணம் என்றார் பட்டினத்தார். ஆசை, பந்தம் பாசம் இதுவே நம்மை இவ்வுலகிற்கு இழுக்கிறது. ஆகவேதான், கடவுளையும் முனிவர்களையும் பந்த பாசங்களைக் கடந்தவர் என்கிறோம். 'இறந்தவர்கள்' பிழைத்துக் கொள்வதற்கு ஒரு முக்கிய காரணம், அவர்களுக்கு வாழ்வில் இருக்கும் ஈடுபாடும் ஆசையும்தான்.

"மூன்று குழந்தைகளுக்குத் தாயான ஒரு பெண்மணிக்குப் புற்றுநோய் வந்தது. 'நான் எப்படிச் சாக முடியும்? என் குழந்தைகளுக்காக நான் வாழ்ந்தாக வேண்டும்' என்றாள் அவள். அந்த நம்பிக்கை, அந்தப் பிணைப்பு, பாசம்—அவள் அதிசயமாகப் புற்று நோயிலிருந்து பிழைத்துக் கொண்டாள்.

ஆசையைத்தான் லட்சியம் என்கிறோம். குறிக்கோள் என்கிறோம். பலர் பல இக்கட்டுகளையும், நெருக்கடிகளையும் மீறி உயிர் வாழ்ந்து தங்கள் லட்சியத்தை அடைவதற்கு அந்தப் பிடிப்புதான், அந்த ஆசைதான் காரணம்.

'படிப்பினை' என்றும் 'அறிவு பெற' என்றும் அவர்கள் சொல்வதைக் கவனித்தீர்களா? வாழ்க்கையே அறிவு பெறும் முயற்சிதான். கஷ்டங்கள், சோதனைகள், துன்பங்கள், தொல்லைகள், நெருக்கடிகள் எல்லாம் நாம் அதிலிருந்து தெரிந்து கொள்வதற்காகத்தான் ஏற்பட்டிருக்கிறது. அத்தகைய அனுபவம் அந்த ஆத்மாவுக்குத் தேவைப்படுகிறது.

ரத்தசோகை கொண்ட ஒரு பணக்காரன், வாழ்க்கையை அனுபவிக்க முடியாமல் நோயாளியாக இருந்தான். அவனை 'ஹிப்னாடைஸ்' செய்து இறந்த காலத்

திற்கு எடுத்துச் சென்றபோது, முன்னொரு பிறவியில் அவன் ஒரு அரசனாக இருந்ததாகவும், நாடு பிடிக்கும் ஆணவத்தில் பல நூறு மக்கள் ரத்தம் சிந்தி மடியக் காரணமாயிருந்தான் என்றும் தெரியவந்தது. நீங்கள் நம்புகிறீர்களோ இல்லையோ அவன் ரத்த சோகைக்கு ஒரு காரணம் இருக்கிறது. விதை இல்லாமல் செடி இல்லை. நீங்கள் செய்த வினை—செயல் அது பலனாகத் திரும்ப வருகிறது.

நல்லது செய்தீர்களானால் நல்ல பலன்; தீமை செய்தால் தீய பலன், இது உலக நியதி. இதிலிருந்து யாரும் தப்ப முடியாது. இந்தப் பின்னணியில் வைத்து நம் வாழ்நாள் சோதனைகளையும் கஷ்டங்களையும் பாருங்கள். காரணம் இல்லாமல் ஏதும் வரவில்லை. எல்லாம் நம் படிப்பினைக்காகத்தான் வந்திருக்கிறது. சிலசமயம் இந்த வாழ்நாளிலேயே கிடைத்துவிடுகிறது. சில சமயம் படிப்பினை பல ஜன்மங்களுக்குத் தொடர்கிறது. நமது ஊரில் சொல்வார்களே, 'அரசன் அன்று கொல்வான்; தெய்வம் நின்று கொல்லும்' என்று. அதை இத்துடன் இணைத்துப் பாருங்கள். எல்லாம் படிப்பினை, எல்லாம் நமக்குப் பாடம் புகட்ட, எல்லாம் நம்மை முன்னேற்ற.

ஆகவேதான் துன்பம் வரும்போது அழுது புலம்பக் கூடாது. அரற்றுவதால் பயனில்லை. நம்மை நாமே நொந்து கொள்வதால் அது ஓடிவிடாது. அதை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். 'ஏதோ எனக்கோர் அனுபவம் குறைந்திருக்கிறது என்பதற்காகத்தான் தரப் பட்டிருக்கிறது' என்று அதை எடுத்துக்கொள்வது மன ஆரோக்கியத்திற்கு நல்லது. புலம்புவதனால் மேலும் நிலைமை மோசமாகிறதே தவிர வழி பிறப்பதில்லை.

இதுவும் ஒரு நல்லதுக்குத்தான் என்று ஏற்றுக்கொண்டு அதிலிருந்து மீள முயல்வது, சிந்திப்பது, உழைப்பது நல்லது. நம்மால் மாற்றமுடியாத விஷயங்களை ஏற்றுக் கொண்டு, அதற்கேற்ப நடப்பதுதான் விவேகம். குளிர் என்றால் அப்படிப்பட்ட குளிர் அமெரிக்காவில், குளிர் நாளில். அதற்காக திட்டிக்கொண்டோ நொந்து கொண் டோவா இருக்கிறார்கள்...

குளிரை ஏற்றுக்கொள்கிறார்கள். அதிலிருந்து நாம் தப்ப முடியாது என ஏற்றுக்கொள்கிறார்கள். நல்ல கம்பளிச் சட்டை போட்டுக் கொள்கிறார்கள். வேலைக்குப் போகிறார்கள். வேலை ஓடுகிறது. உலகம் ஓடுகிறது. அதே போலத்தான் சொந்த வாழ்வில் கஷ்டம் வரும்போது நாம் நடந்து கொள்ளவேண்டும்.''

—பரஞ்சோதி ஆகாயத்தை நோக்கிய வண்ணம் நிற்கிறார்.

நான் மேலும் படிக்கிறேன்: ''நான் வியட்நாம் போரில் 'மாண்டு' போனேன். ஆறுமுறை சுடப்பட் டேன். செத்துப் போகிறோமே என்ற கவலை தோன்ற வில்லை. ஒரு விடுதலை பெற்ற உணர்வு தோன்றியது. என் வாழ்க்கையின் கடந்தகால சம்பவங்கள் பின் னோக்கி ஓடுகின்றன.' மற்றொருவர் கூறுகிறார். ''பாலத்திலிருந்து கார் பள்ளத்தில் பாய்கிறது. எனக்கு பயமேற்பட்டது. அவ்வளவுதான், நான் உருண்டு விழும் காரை ஏதோ தேவதைபோல் உயரே இருந்து பார்க் கிறேன். கடைசியில் எத்தனையோ முறை கார் உருண்ட பின்னும் ஒரு சிறாய்ப்புக்கூட இல்லாமல் நான் காரி லிருந்து அரை மயக்கத்துடன் வெளிவருகிறேன்!''

டாக்டர் பரஞ்சோதியுடன் நான் பேச்சுக் கொடுத்தேன். ''செத்துப் போகிறவர்கள் வாழ்க்கை பின்னோக்கி ஓடிப் படமாக தங்கள் கண்முன் விரிவதாகக் கூறுகிறார்களே, அதைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்கிறேன். டாக்டர் பரஞ்சோதி சில நிமிடங்கள் பேசவில்லை. மருத்துவக் கூடத்தின் மேல் மாடியில் வராந்தாவில் நின்று கொண்டு எங்கோ நோக்குகிறார். உலகம் பூராவுமே நம் கண்முன் கீழே பரந்து கிடப்பது போல் தெரிகிறது.

''நீங்கள் இதை நம்பமாட்டீர்கள். நம்ப வேண்டும் என்று நானும் கூறப்போவதில்லை'' என்று பீடிகையுடன் தொடர்கிறார்: நமது ஊரில் செத்தவுடன் சித்ராபுத்திரன் கணக்குக் கேட்பார் என்று சொல்வார்களே தெரியுமா? சினிமாவில்கூட பார்த்திருப்பீர்கள்-யமனையும் அவர் கணக்கப்பிள்ளை சித்திராபுத்திரரையும். 'செத்தவுடன் வாழ்க்கைப் பேரேடு கண்முன் படமாக விரிந்தது' என்று இங்கு நோயாளிகள் கூறுகிறார்களே, அந்த வாழ்க்கைப் பேரேட்டிற்கு ஒரு உருவகம் கொடுத்துத்தான் சித்திராபுத்திரனை உருவாக்கி இருக்கிறார்களோ நம் முன்னோர்கள் என்று நான் யோசிப்பதுண்டு...பெயரைப் பாருங்கள். சித்திராபுத்திரன், சித்திரம்—படம்—வாழ்க்கைப் படம்...

''நாம் கணக்குக் காட்டவேண்டும். யாரும் இதை மறுப்பதற்கில்லை. அப்படிக் கணக்குக் காட்டவேண்டுமென்பதை முன்பே அறிந்துகொள்வது, கொஞ்சம் நெறியுடன் வாழ வழி செய்கிறது. கொஞ்சம் பயனுள்ள வாழ்க்கையை வாழ நம்மை நெறிப்படுத்துகிறது. இதனால் நாமும், நமது நன்மைகளால் சமூகமும்

பயனடைவது நல்லதுதானே?'' என்று கூறிவிட்டு என்னை நோக்குகிறார்.

டாக்டர் பரஞ்சோதியின் விளக்கங்களில் நான் கட்டுண்டிருந்தேன். என்னும், 'இவருக்குக் கற்பனை அதிகம்' என்ற எண்ணம் என் மனத்தில் ஓடியது. அதைப் புரிந்து கொண்டவராக அவர் கூறினார்: ''நமது முன்னோர்களின் அனுபவங்கள் காலகாலமாக நம்முடன் நம் நம்பிக்கைகளாக இருந்து வருகின்றன. விஞ்ஞான ஆராய்ச்சியும் இதைத்தான் இப்போது சுட்டிக்காட்டு கிறது. நான் அறிவுக்கும் அனுபவத்திற்கும் பழைய நம்பிக்கைக்கும் இன்றைய ஆராய்ச்சிக்கும் பாலம் கட்ட முயல்கிறேன்'' என்றார்.

நான் பதில் பேசவில்லை.

# 9. எதற்காக இந்த வாழ்க்கைப் பயணம்?

வாழ்வுக்கும் சாவுக்கும் ஏதோ எல்லைக்கோடு இருப்பது போல் தெரிகிறது. செத்துப் பிழைத்தவர்கள் தங்கள் அனுபவங்களை வருணிக்கும்போது ''மிதப்பது போல உணர்ந்தேன் என்றும், ஏதோ நீந்துவதுபோல் இருந்தது என்றும், கதவு போல் இருந்தது......வேலி போலிருந்தது'' எனவும் கூறினார்கள்.

உடல் கீழே கிடக்கிறது. உடலினின்று உயிர் பிரிகிறது. அந்த உயிருக்கேற்படும் அனுபவங்கள் நினைவுகளாக நிற்கின்றன. இரு வேறு உலகத்தையும் இணைப்பது மனம்தான். மனம் குடியிருக்கும் இடம்தான் மூளைப் பகுதி. மூளை திடப்பொருளாலான ஆதாரம். மனம் சக்தி வடிவில் அங்கே சஞ்சாரம் செய்வது. இரண்டும் ஒருங்கிணைந்த வடிவில்தான் இந்த உடல் நடமாடுகிறது; இயங்குகிறது.

உயிரோடு இருக்கும்போது நாம் மனத்தால் நினைக்கிறோம். உயிர்போன நிலையிலும் மனம் இயங்குகிறது; மனத்தால் நினைக்க முடிகிறது; மனத்தால் அனுபவிக்க முடிகிறது.

மதங்கள் எல்லாம் ஆத்மா சாவதில்லை என்று ஒரு முகமாகக் கூறுகின்றன. அனுபவத்திலோ, ''மனம் சாகவில்லை'' 'இறந்த' நிலையிலும் இயங்குகிறது' என்பதை உணர்கிறோம். அப்படியானால் மனம் என்பது தான் ஆத்மாவா என்ற ஒரு கேள்வி எழுகிறது.

இந்தச் சமயத்தில் பெரியோர்கள் நமக்குத் துணை வருகிறார்கள், வ.உ.சி. கூறுகிறார்: ''மனம் என்பது இவ்வுடம்போடு கூடி நிற்கின்ற (உயிரின்) ஜீவனின் நினைப்பு; சில சமயம் இது உடம்புக்கு அப்பாலும் இயங்கும்.''

ஆத்மா பற்றி அடுத்து வ.உ.சி. கூறுகிறார்: 'யான்' 'எனது' எனக் கருதாது உலகை நன்மையே கருது கின்ற பேரறிவு'' என்று.

இவை எல்லாவற்றையும் இணைத்துப் பார்க்கலாம். ஏதாவது தெய்வீக உண்மைகள் கிடைக்குமா எனக் கவனிக்கலாம்.

மனம் இரு வேளைகளில் ஈடுபடுகிறது. ஒன்று, 'யான்' 'எனது' என்று தனது நன்மையையே கருதும் இயல்பு. எனது உயிர், எனது ஆசை, எனது உடல், எனது உடைமை என 'தான்' என்று இயங்கும் தன்னியக்கம். இரண்டாவது, தனக்கு அப்பால் சென்று பிரபஞ்சப் பொருள்கள் அத்தனையுடனும் இணைந்து நின்று, பொது நன்மைக்காக, உலக நன்மைக்காகப் பாடுபடும் ஓர் இயக்கம். இவ்வுலகமென்ற கோளம் தன்னைத் தானே சுற்றிக்கொள்கிறது. அத்துடன் பிற கோள்கள் நட்சத்திரங்களினாலும், அத்துடன் இணைந்து சுற்று கிறது. அதே போலத்தான் மனமும் இயங்குகிறதா?''

மூளை மருத்துவர்கள் மூளையை இடது பகுதி எனவும், வலதுபகுதி எனவும் பாகுபடுத்திக் கூறுகின்

றனர். இடது பகுதியில்தான் நமது அன்றாட அலுவல் பற்றிய சிந்தனைகள், பேசுதல், எழுதுதல், சாப்பிடுதல், விவாதித்தல் போன்ற காரண காரியத் தொடர்பு கொண்ட சிந்தனைகள் நிகழ்கின்றன. மூளையின் வலது பாகத்தில் நம்முடன் இணைந்துவிட்ட பழக்க வழக்கங் கள். ஆழ்மன உணர்வுகள், கனவுகள், பிரபஞ்சத் தொடர்பு கொள்ளும் செயல் எல்லாம் நிகழ்கின்றன என்று கூறுகிறார்கள். மூளை திடப்பகுதி. மனம் சக்தி யால் ஆன நினைவுப்பகுதி. வ.உ.சி. கூறும் 'யான்' 'எனது' என்ற செயல்கள் மூளையின் இடது பகுதியிலும் ஆழ்மனம் பிரபஞ்சத் தொடர்பு, உலக நன்மை என்ற மன வெண்ணங்கள் மூளையின் வலது பகுதியிலும் நிகழ் கிறது என்று கூறலாம்.

இதனால் என்ன நன்மை என்று நீங்கள் கேட்க லாம்.

மனம் எப்படி நினைவு நிலையில் இயங்குகிறது; மனம் எப்படிக் கனவு நிலையில் இயங்குகிறது; மனம் எப்படி இறந்த நிலையில் இயங்குகிறது என்று தெரிந்து கொள்ளும்போது நமக்கு வாழ்க்கைத் தொடர்பு புரிகிறது. மனம் ஏதோ பரிணாம வளர்ச்சியை நோக்கிப் போய்க்கொண்டிருப்பது தெரிகிறது.

இதைத்தான், ''தெய்வீக நிலை நோக்கி மனிதனின் வளர்ச்சி (Spiritual evolution)' என்று அரவிந்தர் கூறு கிறார். இதையேதான் வேறு வார்த்தைகளில் பிரெஞ்சு நாட்டுத் தத்துவஞானி டெயில்டி சார்தேனும் கூறு கிறார். அவ் வளர்ச்சியின் போக்கில் இவ்வுலக வாழ்க்கை நம்மை 'முன்னேற்றிக் கொள்ள' ஒரு சந்தர்ப்பம் என்று புரிகிறது. அந்த இவ்வுலக வாழ்க்கையின் வளர்ச்சித்

தத்துவம் அன்பும் அறிவும் என்ற அடிப்படை புரிகிறது. அந்த அடிப்படை புரியும்போது நமது கண்ணோட்டம், "இன்று காலையில் என்ன சாப்பிட்டோம்?" என்பதிலோ, 'எப்படி எதிரியை மட்டம் தட்டினோம்?" என்று சின்ன விஷயங்களில் இறங்காமலோ மனம் வாழ்வுப் பயனில், பிறவிப் பயனில் ஈடுபடுகிறது. பிறவியின் பயன் என்ன என்று தினமும் நாம் ஒருமுறை காலையில் யோசித்துவிட்டு வேலையைத் துவங்கும்போது, நாம் பிறருடன் கொள்ளும் உறவு, ஈடுபாடு, பெருந்தன்மை மிக்கதாய் விளங்குகிறது. மகிழ்ச்சி நிறைந்ததாய், பிறரை மகிழவைக்கும் முயற்சியாய், ஊர் உலகத்தின் நன்மையில் கருத்துக்கொள்ளும் நல்லெண்ணமாய் மலர்கிறது. எதிரியை மன்னித்து விடும் மனோபாவம் மிகுகிறது.

அதைத்தான் பாரதி பாடினார்:

"சின்னஞ்சிறு கதைகள் பேசி
வாடிப்பல மிக உழன்று பிறர்
வாடப் பலசெயல்கள் செய்து......"

என. அதற்கு நேரமில்லை. இங்கே வாழ்க்கை குறுகியது. இந்த வாழ்க்கையை ஒரு முறைதான் வாழ்கிறோம். அதை நாம் அழகாக, மகிழ்வுடன், நமக்கும் பிறருக்கும் நாட்டுக்கும் பயன்படுமாறு வாழ்ந்துவிடவேண்டும்.

அன்றாட வாழ்வின் வேகத்தில் கண்முன் இருப்பவைதான் புரிகின்றன. இன்றைக்குச் செய்யவேண்டியதும் நமது சொந்த வாழ்க்கைக்கு எது எப்படி பயன்படும் என்பதும்தான் தெரிகிறது. அதைத்தான் பார்க்கிறோம். அதைத் தாண்டிப் பார்க்கும்போது நமது கண்ணோட்டம் மாறுபடுகிறது. அதனால் வாழ்க்கை

நிறைவு பெறுகிறது. அதைத்தான் சாவுக்குப் பின்னால் அனுபவங்கள் தருகின்றன.

எந்த ஊருக்குப் போகிறோம் என்பது தெரியாமல் நாம் ரயிலில் ஏறி உட்காருவதில்லை. எதற்காகப் பயணம் செய்கிறோம் என்ற தெளிவு இல்லாமல் நாம் துவங்குவதில்லை. ஆனால் வாழ்க்கைப் பயணத்திலோ நமக்குக் கொள்கைகள் இருப்பதில்லை, லட்சியம் இருப்பதில்லை. வாழ்க்கைப் பயணம் எதை நோக்கி என்று கேட்டால் சாவை நோக்கி என்பார்கள் சிலர். சாவு—நாம் நோக்கிப் போவதல்ல. கால முதிர்வால் தானே வருவது. தடுக்க முடியாத ஒன்று. இது இயற்கை. நீங்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் நேரப் போகின்ற நிகழ்ச்சி ஆகவே வாழ்க்கைப் பயணம் சாவை நோக்கி அல்ல—ஒரு லட்சியத்தை நோக்கி இருக்க வேண்டும். அற்புதமான குறிக்கோளை நோக்கி இருக்க வேண்டும். நமக்கும் பிறருக்கும் மகிழ்வு தரும் நல்ல காரியங்களை நன்மைகளைச் செய்வதை நோக்கி இருக்கவேண்டும்.

அதேபோல் வாழ்க்கைப் பயணத்தை எதற்காக மேற்கொள்கிறீர்கள் என்று கேட்டால் "ஏதோ போகிறது" "ஏதோ வாழ்க்கை ஓடுகிறது" என்று பதில் தருமாறு வாழ்க்கைப் பயணத்தை ஆக்கக் கூடாது. வெளியூர்ப் பயணம், தொழிலுக்காக, உற்றார் உறவினரைப் பார்க்க, உல்லாசப் பயணமாக என்று ஒரு காரணத்துடன் மேற்கொள்ளப்படுகிறது. அதேபோலத் தான் நமது வாழ்க்கைப் பயணத்தில் ஒரு காரணம் இருக்கவேண்டும்.

பாரதியார் சொல்கிறார், தன் வாழ்க்கைப் பயணம் பற்றி:

சொல்லடி சிவசக்தி—என்னை
சுடர்மிகு அறிவுடன் படைத்துவிட்டாய்!
வல்லமை தாராயோ இந்த
மாநிலம் பயனுற வாழ்வதற்கே''

என்று 'மாநிலம் பயனுற வாழ்வதற்கு' என்பதுதான் பாரதியின் வாழ்க்கைப் பயணத்தின் நோக்கம்.

எட்டயபுரத்தில் ஒரு சாதாரண குடும்பத்தில் பிறந்த பாரதி அப்படிப் பாடுகிறார். எந்த விதத்தில் நீங்கள் தாழ்ந்துவிட்டீர்கள் என்பதைக் கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். ஒருமுறை நீங்கள் அந்தப் பாரதியின் இரண்டு வரிகளைப் பாடிப் பாருங்கள்; உங்களைப் பாரதியாக எண்ணி, கொஞ்சம் பாடிப் பாருங்கள். காலையில் குளித்தவுடன் ஒருமுறை அதைப் பாடிவிட்டு வாழ்க்கையைத் துவக்கிப் பாருங்கள். இரவில் படுக்கப்போகும் முன் ஒருமுறை அதை மன தாரப் பாடிவிட்டு உறங்கச் செல்லுங்கள். ஏற்படும் அனுபவத்தைச் சொல்லுங்கள்...

# 10. நிறைவும் மகிழ்வும் பெற எளிய வழிகள்

நாம் கற்பனை செய்யும்போது மனத்தில் எண்ணங்கள் படங்களாக விரிகின்றன. கனவில் ஆழ்மன எண்ணங்கள் நிகழ்ச்சிகளாக விரிகின்றன. அந்த நிகழ்ச்சிகள் பெரும்பாலும் உருவகங்களாக வெளி வருகின்றன. ஒரு நல்ல மன நிலையில் இருக்கிறோம் என்பதை வெளிப்படுத்த பூந்தோட்டத்தில் நாம் உலவுவதாக ஒரு கற்பனை தோன்றக் கூடும், கஷ்டமான பிரச்னைகளைச் சமாளிக்கும்போது ஏதோ பயங்கர மிருகத்துடன் சண்டை போடுவது போல கற்பனை விரியும். ஆழ்மனம் எதையும் நேரே சொல்வதில்லை. ஓர் உருவகமாக வெளிப்படுத்துகிறது. சில குறியீடுகளின் மூலம் நம் மன நிலையையும், நாளை நடக்கப் போவதையும் வெளியிடுகிறது. ஏனெனில் எதையும் மனம் 'படமாக'த்தான் பார்க்கிறது. அது விரைவில் நிகழக்கூடிய ஒன்று. காணும் ஓர் படத்தை வார்த்தைகளால் விளக்கித்தான் புரிந்துகொள்ள வேண்டுமென்றால் அதற்கு நேரமாகும்.

ஆழ்மனமோ படத்தை, உருவகமாகக் குறியீடு களாக வெளியிடுகிறது. 'இறந்த'வர்கள் பலர் கூறினார் கள்: "கப்பலில் போய்க் கொண்டிருக்கிறேன், அக்கரை யில் எனக்குத் தெரிந்த காலமான உறவினர், நண்பர்கள் நிற்கிறார்கள் என்னை வரவேற்க. கப்பல் கரை சேருகிற நேரத்தில் திசை, திரும்பி திரும்பிவரத் துவங்குகிறது. இவ்வுலகில் — இவ்வுடல் வாழ்வில் — நான் முடிக்க வேண்டியது நிறைய இருக்கிறது என்ற உணர்வு என் னுள் தோன்றியது."

ஒரு திபேத்திய மருத்துவர் புத்தபிட்சு—ஒரு நோயாளியைப் பரிசோதிக்க அமெரிக்க மருத்துவ மனைக்கு அழைத்து வரப்பட்டார். அமெரிக்க மருத்து வர்கள் பல்வேறு கருவிகளால் (எக்ஸ்ரே, ரசாயன சோதனை, அணுக்கதிர் என) நோயாளிகளைப் பரிசீலிப் பவர்கள். புத்தபிட்சுவோ நோயாளியின் உடல்மீது ஓர் அடி உயரத்தில் கையை வைத்துப் பார்த்தார், நோயாளியின் சிறுநீரை முகர்ந்தார். அவ்வளவுதான். பின் உருவகமாக, காற்று, சுழல் தடை, வெள்ளம் என்று நோயாளியின் நிலையை விளக்கினார். மற்ற மருத்துவர் களுக்கு ஒன்றும் புரியவில்லை. அங்கிருந்த இதய நிபுணருக்கோ எல்லாம் புரிந்தது. புத்தபிட்சு வின் உருவகங்களை விளக்கி மருத்துவர் கூறினார், "நோயாளிக்கு இதயத்தில் பிறவிக் குறைபாடு இருக் கிறது" என.

"இருவேறு உலகத்து இயற்கை" என்றார் வள்ளுவர். உலகம் இருவகைப்படும். அருள் தேவைப் படும் உலகம் அவ்வுலகம் என்றும், பொருள் தேவைப் படும் உலகம் இவ்வுலகம் என்றும் கூறுகிறார். அருள்

தேவைப்படும் அவ்வுலகிற்குப் போகும்போது, எப்படி அருளை இவ்வுலகத்திலிருக்கும் போதே பெறுவது என்பதை எல்லாம் நம் சிந்தனைக்கு விட்டுவிடுகிறார் வள்ளுவர்.

மற்றோரிடத்தில் வாழ்க்கையைப் 'பிறவிப் பெருங் கடல்' என்று உருவகிக்கிறார் வள்ளுவர். மற்றோரிடத்தில் 'உறங்குவது போலும் சாக்காடு. உறங்கி விழிப்பது போலும் பிறப்பு' என்று கூறுகிறார். இறப்பு ஒரு தூக்கம், ஆழ் மனநிலை என்று கூறி அத்துடன் விட்டு விடுகிறார் வள்ளுவர். நாம் சிந்திக்க நிறைய விஷயங்கள் இங்கே இருக்கின்றன.

'இறந்த' சில நிமிடங்களில் இறந்துவிட்டோம் என்ற வருத்தமும், சோகமும் ஏற்பட்டதாக அவர்கள் கூறினார்கள். அதற்குப்பின் ஓர் ஆழ்ந்த அனுபவம் ஏற்பட்டதாம். அதனால் சற்று நேரத்திற்குள் விடுதலை பெற்ற உணர்வும், மகிழ்வும் ஏற்பட்டதாகத் தெரிவிக்கிறார்கள்.

"இந்த நிலையை விட்டுப்போக மனமில்லை. இந்தப் பேரொளியின் அருகிலேயே இருக்க வேண்டுமென்ற ஆசை ஏற்படுகிறது. ஆனாலும், ஏதோ ஒன்று என்னைப் பிடித்து இழுக்கிறது. திடீரென நினைவு வருகிறது. மருத்துவமனையில் இருப்பதை உணர்கிறேன்" என்று தங்கள் அனுபவத்தைக் கூறுகிறார்கள்.

ஜான் லில்லி என்ற பிரபல மருத்துவ மனசிகிச்சை நிபுணர் சில மருந்துகளை உட்கொண்டு தன்னை நினைவிழக்கச் செய்தார். அவர் தம் அனுபவத்தைக் கூறுகிறார்: "பெரியவர்கள் இரண்டு பேர், இரண்டு

பேரொளியாக என்னை நோக்கி வருகின்றனர். என் மனத்தில் நிறைவும், நிம்மதியும் நிலவுகிறது. அங்கேயே தங்கிவிட விரும்புகிறேன். 'திரும்பிப் போ, சிறிது காலம் கழித்து வா' என்கிறார்கள். இப்படி மருந்து மூலம் மனத்தைப் பாதிக்கச் செய்வது சரியல்ல என்று தெரிவிக்கிறார்கள். நான் நினைவு பெறுகிறேன். டாக்டர் ஜான் லில்லி, 'டால்பின்' எனப்படும் சுறாமீன்களை வைத்துக் கொண்டு மனம், அறிவு பற்றி அமெரிக்க ராணுவத்திற்காகப் பல ஆராய்ச்சிகளைச் செய்தவர்.

எல்லாரும் பேரொளி ஒன்றைக் கண்டதாகவும் நிறைவும் மகிழ்வும் பெற்றதாகவும் தெரிவிப்பதைக் கவனியுங்கள்.

இந்த நிலை இறந்த பின் பெறப்படும் நிலை அல்ல. நம்மில் பல பேருக்குக் கோயில்களில், மலையுச்சியில் நதி தீரத்தில் எனப் பல இடங்களில் இத்தகைய அனுபவங்கள் ஏற்படுகின்றன. ரமணர் இறந்துவிட்ட போதும், ரமணர் வாழ்ந்த அறைக்குள் நுழையும்போது ஏற்படும் நிறைவும் நிம்மதியும் இதே வகையைச் சேர்ந்தவை. காஞ்சிப் பெரியவர் முன்போ, சில மகரிஷிகள் முன்போ நமக்கு இத்தகைய அனுபவங்கள் ஏற்படுகின்றன. அந்தப் பேரொளியின் ஞானநிலையை எய்தியவர்கள் இவ்வுலகிலும் நம்மிடையிலும் வசிக்கிறார்கள். அவர்களிடமிருந்து புறப்படும் அன்பும், கருணையும் நமது ஆசாபாசங்களை யெல்லாம் அப்புறப்படுத்துகிறது. இதனால் அவர்கள் இருக்கும் நிலைக்கு நாமும் போகக் கூடிய நிலை ஏற்படுகிறது.

"ரமணர் முன் நின்றபோது என் கேள்விகளுக்கெல்லாம் விடை கிடைத்துவிட்டது' என்று பால் பிரண்டன்

என்ற ஆங்கிலப் பத்திரிகையாளர் கூறுவதும், ''ராம கிருஷ்ணரைக் கண்ட மாத்திரத்தில் என் வெறும் தர்க்க வாத அறிவு அடங்கிவிட்டது'' என்று விவேகானந்தர் கூறுவதும் இதைத்தான்.

இறந்தபின்தான் அந்த நிறைவும், நிம்மதியும் காண வேண்டுமென்பதல்ல. வாழும்போதே அதை நாம் உணர்ந்து, நம் வாழ்வையும் வாழ்க்கை லட்சியத்தையும் அதற்கேற்ப அமைத்துப் பெரியவர்களின்—மகான்களின் ஆசியையும், அருளையும் பெறக்கூடும். அதற்கும் மேலாக ஒருபடி சென்று யோகசாதனங்கள் செய்வதன் மூலம் நாமே அந்த நிலையை அடையலாம். இதற்காக வீடு வாசலைத் துறந்து துறவறம் மேற்கொள்ள வேண்டுமென்பதல்ல. இந்த 'நிம்மதியும் நிறைவும்' நம் அன்றாட வாழ்வின் எல்லாப் பணிகளிலும் புகுந்து நமக்கு வெற்றியையும் பூரணத்வத்தையும் கொடுக்கும். 'யோக சாதனை' என்ற பெயர் நம்மைப் பயமுறுத்த வேண்டியதல்ல.

நிகழும் புற நிகழ்ச்சிகளிலிருந்து விடுபட்டுத் தன்னை மறந்து-தான் எழுதும் எழுத்துடன் ஒன்றாகிவிடும் எழுத்தாளன்—கவிஞன் யோக சாதனை செய்கிறான். அதே போல் பாடும் இசையில் தன்னை மறந்து நாத வெள்ளத்தில் ஒன்றி மேலே போகும் ஒரு இசைக் கலைஞன், 'நாத உபாசனை'யில் அதே நிலையை எய்து கிறான். தமிழ்நாட்டில் இசைக்கலைஞர்கள் 'தான்' என்பதை மறந்து, நாதோபாசனையை ஆழ்ந்து அப்யசிப்பார்களானால் தங்களுக்கும் ரசிகர்களுக்கும் எத்தனை பெரிய பாக்கியமாயிருக்கும், என்று எண்ணிப் பார்க்கிறேன்.

இதைவிட எளிய வழி ஒன்றும் இருக்கிறது, அந்த நிறைவை அடைய. அதுதான் தியானம்; பிரார்த்தனை, மனம் எதை விரும்புகிறதோ அதை அடைகிறது. ஏன், நிறைவும், நிம்மதியும் வேண்டும் என்று பிரார்த்திக்கக் கூடாது? மனம், நாம் கேட்டவற்றை நமக்குத் தரு கிறது.ஏன் நாம் கேட்கக் கூடாது...?

# 11. வாழ்வை வைத்துக்கொண்டு என்ன செய்தோம்?

''எனது குழந்தைகளின் பிரார்த்தனை, எனது கணவனின் பிரார்த்தனை, என்னைத் திரும்பவும் இவ் வுலகிற்குக் கொண்டு வந்துவிட்டது'' என்று திரும்பி வந்தவர்கள் பல பேர் கூறினார்கள். ஏழாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட, இறந்தவர்களைப் பற்றிய திபேத்தியப் புத்தகம் கூறுகிறது: ''ஒரு நல்ல மனிதன் வாழ்ந்து, உயிர் பிரியும்போது அவ்வுயிரைப்— பிரார்த்தனைகளினால் மீண்டும் இழுக்காமலிருக்க வேண்டும்.'' வயதானவர்கள் நமது ஊரில் இறந்து போகும்போது எபபடி அதைக் கிராமங்களில் ஒரு மகிழ்ச்சிகரமான சம்பவமாகக் கொண்டாடுகிறார்கள் என்பதையும், இறந்தவனின் ஆத்மா சாந்தி பெற நாம் நடத்தும் பிரார்த்தனைகளையும் இத்துடன் இணைத்துப் பாருங்கள்.

பிரார்த்தனைகள் வலுவுள்ளவை. இறந்த உயிரையும் திரும்பக் கொண்டுவரும் வலு படைத்தவை. பாச உணர்வு (அன்பு) அத்தனை வலு படைத்தது. இறந்தவர்களையும் மீட்டுக்கொண்டு வரும் அத்தனை வலு படைத்தது. சாவித்திரி யமனுடன் போராடுகிறாள் தன்

கணவன் உயிருக்காக. அவள் தன் வாக்குச் சாதுரியத்தினால், தர்க்கவாதத் திறமையினால், புத்திசாலித்தனத்தினால் கணவனின் இழந்த உயிரை மீட்டாளா அல்லது கணவன் மீண்டும் வாழ வேண்டும் என்ற பாசம், ஆசை காரணமாக உயிர் மீண்டதா என்பதைக் கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்.

வயது தாண்டியவர்களை எல்லாம் அவர்கள் லட்சியமே நெடுநாள் வாழ வைத்திருக்கிறது. செய்ய வேண்டிய காரியங்கள்மீது உள்ள லட்சியம், ஆசை இவையே—வாழ்வை நீடிக்கிறது. நாம் நமக்காக மட்டுமே வாழாமல், பிறருக்காக, நம் குழந்தைகளுக்காக, கணவனுக்காக, மனைவிக்காக. பெற்றோருக்காக, ஊர் உலகத்திற்காக என்று வாழத் துடிக்கும்போது மனிதனின் வாழ்நாள் அதிகப்படுகிறது, மனிதனும் சிரஞ்சீவியாகிறான்.

இப்படி இறந்து பிழைத்தவர்கள் தங்களுக்கேற்பட்ட அனுபவத்தை வெளியில் கூறப் பயப்பட்டார்கள். ‘‘நான் கண்டது உண்மை. என் அனுபவம் உண்மை. என் உடல் கீழே கிடப்பதை மேலிருந்து பார்த்தேன். இதை எல்லாம் சொன்னால் எனக்கு மூளை கெட்டு விட்டது என்று சொல்வார்களோ என்ற பயம். அதனால் நான் அதைப் பற்றிப் பேசவே இல்லை. ஏனெனில் இது நம்பும்படியாக இல்லை.’’

மற்றொருவர் கூறுகிறார்: ‘‘யாரிடமும் கூறக் கூடாது. அம்மாவிடம் மட்டுமே கூறவேண்டுமென்று ஒரு நாள் கூறினேன். ‘ஊம்’ என்று சொல்லிவிட்டு அவர் தம் வேலையைப் பார்க்கப் போய்விட்டார். எனக்கோ இது வெகு முக்கியமாகப் பட்டது—இறந்த பின் ஏற்பட்ட

என் அனுபவங்கள். என் அம்மா, எனக்கு சித்தபேதம் ஏற்பட்டிருக்கிறது என்று எண்ணியிருக்கக் கூடும்'' வேறொருவர்: ''நர்சிடம் இதுபற்றி நான் கூறினேன். 'பேசாதே' என்று ஒரே வார்த்தையில் என் வாயை அடைத்தாள்.'' மற்றொருவர், ''டாக்டரிடம் எனக்கேற்பட்ட அனுபவத்தைக் கூறினேன். அவர், 'அதிக வலி இருக்கும்போது ஆவி வெளியேறி விடுகிறது. மனிதன் செத்த நிலையில் கிடக்கிறான்' இப்படிப் பல கேஸ்கள் நான் பார்த்திருக்கிறேன் என்றார்.''

மனிதன் எதையும் தன் அனுபவம், அறிவு என்ற இரண்டின் துணை கொண்டு எண்ணிப் பார்க்கிறான். தன் அனுபவத்திலிருந்து தொடர்புபடுத்த முடியாத எதுவும் அவனுக்குப் புரிவதில்லை. அதனால்தான் மாறுபட்ட பழக்க வழக்கங்கள், மாறுபட்ட கலாசாரம் இவை எல்லாம் அவனுக்கு அதிர்ச்சியைத் தருகின்றன.

இத்தகைய அனுபவங்களைப் பெற்றவர்களின் அபிப்பிராயங்களைக் கேட்போம்... ''திடீரென்று வயதேறிய அறிவு நிலையை நான் பெற்றேன். ஒரு புது உலகம்—இதுவரை நான் உணராத உலகம்—என் கண்களுக்குப் புலனாக ஆரம்பித்தது. தெரிந்துகொள்ள வேண்டிய விஷயங்கள் நிறைய இருப்பதாகப் பட்டது. வெறும் சினிமாவுடனும், வெறும் கதைப் பத்திரிகைகளுடனும் வாழ்வு முடிந்துவிடவில்லை. அதற்கப்பால் மிக முக்கியமான பெரிய உண்மைகள் இருக்கின்றன என்ற ஞானம் பிறந்தது.''

''வாழ்வை வைத்துக்கொண்டு இத்தனை நாள் என்ன செய்தேன் என்ற கேள்வி என்னுள் எழுந்தது. பெரிய வாய்ப்பை உணராமல் ஏதோ நாட்களை ஓட்டிக்

கொண்டிருப்பது புரிந்தது. உலகம் எனக்கு ஏதும் கடமைப்பட்டில்லை என்ற உணர்வு தோன்றியது. எல்லாக் காரியங்களையும் நான், என் நோக்கில்தான் செய்தேன் என்பது புரிந்தது. நல்லது என்பதற்காகக் காரியங்களைச் செய்தேனோ அல்லது அவை எனக்கு நல்லது என்பதற்காகக் காரியங்கள் செய்தேனோ என்று என்னையே நான் கேட்டுக்கொண்டேன்.''

''வாழ்வில் ஒரு அர்த்தத்தைத் தேடி நான் பாடுபட வேண்டும். உழைக்க வேண்டும் என்ற ஒரு நெறி பிறந்தது. இவ்வுலக வாழ்வின் மேன்மைகள் எனக்கு முன்னைவிட நன்கு புலனாயின. இதனால் அறிவு தெளிவு பெற்றது. முன்பெல்லாம் என் குழந்தைகள், என் குடும்பம் என்று கவலைப்படுவேன். இப்போது எதிர் காலத்தைப் பற்றிக் கவலைப்படாமல் நிகழ்காலத்தில் வாழ்கிறேன். நிகழ்காலத்தின் ஒவ்வொரு நிமிடத்தை யும் ரசித்து வாழ்கிறேன்.''

''பிறரிடம் என் அன்பு அதிகமாகிறது. பிறர் தேவை களை என்னால் ஒரு கணத்தில் ஊகிக்க முடிந்தது. நான் புனிதம் அடைந்துவிட்டதாக...தெய்வீகம் பெற்றதாகக் கூறவில்லை. என் வாழ்வில் புதிய லட்சியம் பிறந்தது; புதிய நெறி பிறந்தது; புதிய உறுதி பிறந்தது.''

''சாவைப் பற்றிய பயம் இப்போதில்லை. நான் சாவதற்குள் திருந்த வேண்டும் என்ற ஆசைதான் இருக் கிறது. அன்று ஒருநாள் தெருவில் ஒரு சந்தில் என்னை ஒருவன் மடக்கித் துப்பாக்கியைக் காட்டினான். நான் பயப்படவில்லை. ஏன்...? நான் செத்துப் போகப் போவதில்லை என்பது எனக்குத் தெரியும். செத் தாலும் எங்கோ வாழ்ந்து கொண்டிருப்பேன் என்பது தெரியும்.''

'இறந்த'வர்கள் மீண்டும் பிழைத்துக் கொண்டவுடன் விவரமாக அங்கு நடந்த எல்லா நிகழ்ச்சிகளையும் டாக்டர்கள் பேசிய எல்லாப் பேச்சுக்களையும் அப்படியே வருணித்தார்கள். அது உண்மையாக இருந்தது. இதுவே அவர்கள் கூறிய மற்ற அனுபவங்களும் உண்மையாயிருக்கக்கூடும் என்ற ஆதாரத்தைக் கொடுத்தது.

திபேத்திய புத்தகங்கள், பைபிள், திருக்குறள் என்றும், பிளேடோ, இம்மானுவேல், சுவீடன்பர்க் என்றும் பல அறிஞர்களது அனுபவங்களும் இதை ஒத்திருக்கின்றன.

சொர்க்கம் என்றில்லை, நரகம் என்றில்லை. எல்லாம் மனம்தான். மனம்தான் ஆத்மா. மனம்தான் சாவிற்கப்பாலும் வாழ்கிறது. இவ்வுலக வாழ்க்கையில் எத்தகைய எண்ணங்களைப் போட்டு வைத்து—மனத்தை அடைத்து வைத்தோமோ அதே எண்ணங்கள்தான் சாவிற்கப்பாலும் தொடர்கின்றன. மனத்தை நல்ல எண்ணங்களாலும் — வாழ்க்கையை நல்ல செய்கைகளாலும்—பக்குவப்படுத்துவதுதான் இவ்வாழ்க்கையின் நோக்கம். இதைத்தான் இறந்தவர்களைப் பற்றிய ஆராய்ச்சி நமக்கு புலப்படுத்துகிறது.

# 12. மதுரை ஆதீனகர்த்தரின் புத்தகம்...

சில அமெரிக்க பல்கலைக்கழகங்களில், 'இறப்பு என்பது என்ன?' 'சாவுக்குப் பின் ஏற்படும் அனுபவம் என்ன?' என்பது பற்றி நடத்தப்படும் ஆராய்ச்சிகளைப் பற்றி நான் எழுதி முடித்து முற்றுப் புள்ளியிட்ட மறுநாள், எனக்கு மதுரை ஆதீனகர்த்தர் தவத்திரு சோமசுந்தர சுவாமிகளிடமிருந்து கடிதமும் அவரது புத்தகங்களும் வந்து சேர்ந்தன.

மதுரை ஆதீனகர்த்தர் தவத்திரு சோமசுந்தர சுவாமிகள் தனது அனுபவங்களையும், நமது ஞானி களின் மேற்கோள்களையும், பிற நாடுகளிலும் பிற காலங்களிலும் இது சம்பந்தமாக நிலவிய நம்பிக்கை களையும் தொகுத்து, 'இறந்தவர்கள் வாழும் நிலையும் பேசும் முறையும்' என்ற தலைப்பில் கொடுத்துள்ளார்.

சோமசுந்தர சுவாமிகள் கூறும் பலவும் நமது நம்பிக்கைகள். 'பெரும்பாலான நம்பிக்கைகள்' சரி என்கிற அளவில் இன்றைய மேனாட்டு ஆராய்ச்சிகள் புலப்படுத்துகின்றன. வாழ்க்கைக்குப் பயன்படும் பல நல்ல விஷயங்களை சுவாமிகளின் நூலிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

அவரது புத்தகம் பற்றி மற்றும் சில கருத்துக்களை நான் தெரிவிக்க கடமைப்பட்டுள்ளேன்.

1. சுவாமிகள் தமிழ் நன்கு கைவந்த ஓர் எழுத்தாளர் மூலம் இப்புத்தகத்தை வெளிக் கொணர்ந்திருந்தால் தெளிவு அதிகம் இருந்திருக்கும்; எளிதாக ஆர்வத்துடன் படிக்க முடிந்திருக்கும்; 'கூறியவை கூறலைத்' தடுத்திருக்கலாம்.

2. இறந்த உயிர் கனவுலக உடலில் வாழ்கிறது என்று எழுதுகிறார். கனவு காணுகிற உடல்தான் ஆவி உடல் என்கிறார் சுவாமிகள். கனவுலகம் பற்றிய மேனாட்டு மனோதத்துவ ஆராய்ச்சிகளைப் பற்றிய அறிவு சுவாமிகளுக்கு உதவியிருக்கக்கூடும்.

நமது ஒடுக்கப்பட்ட ஆசைகள் கனவில் உருவகமாக வருவதுண்டு. இளவயது நினைவுகளும் நமது ஆசைகளும் கனவுகளாக விரிவதுண்டு. அதிகமாக உண்டு விட்டுப் படுத்துவிட்டால் உடனடியாகப் பலவிதமான—சங்கடம் நிறைந்த—கனவுகள் ஏற்படும். கனவுகளில் பலவித நிலைகள் இருக்கின்றன. ஆக, கனவு காணுகிற உடல் தான் ஆவி உடல் என்றால் எந்தக் கனவு நிலையைப் பற்றி சுவாமிகள் குறிப்பிடுகிறார்? நம்மை ஆட்டு விப்பது, ஆன்மாவாக இருப்பது ஆழ்மனம் (Unconscious mind) என்று சுவாமிகள் கூறினால் அது ஏற்கக் கூடியதாக இருக்கும். இன்றைய மனோதத்துவ ஆராய்ச்சிகள் சுவாமிகளுக்குப் பெரிதும் உதவக்கூடும். கனவுகள் பற்றிய இன்றைய ஆராய்ச்சிகளைப் பற்றிப் பல்கலைக் கழக மனோதத்துவ பேராசிரியர்களுடன் விவாதிப்பது பலன் தரும்.

3. ''இறந்த பின் ஏற்படும் அனுபவங்களின் அறிவு நமது இவ்வுலக வாழ்வை நெறிப்படுத்த உதவும்; நமது வாழ்வை மேம்படுத்த உதவும்'' என்ற நம்பிக்கையில் நான் கட்டுரைகளை எழுதினேன். சுவாமிகள் இறந்தவர்களுடன் பேசுவதைப் பற்றி எழுதியிருக்கிறார். இறந்தவர்கள், இருப்பவர்கள் என்ற பாகுபாட்டை ஒரு கணம் மறந்து விடுங்கள். மனத்துக்கு மனம் தொடர்பு ஏற்படுத்த முடியும். இது உண்மை. ஆனால் சோதிடம் போல, இதிலும் எங்கே உண்மையானவர்கள் இருக்கிறார்கள். எங்கே பொய்யான ஆஷாடபூதிகள் இருக்கிறார்கள் என்பதைக் கண்டுகொள்வது கஷ்டம். மேலும் இறந்தவர்களுடன் பேசுதலும், ஊயா பிளான் செட் (OuijaBoard) போன்றவைகளும் ஆழ்மனத்தைத் திறக்கும் அபாயக் கருவிகள் என்றும், கனவு விளக்கமும், தியானமும்தான் பத்திரமான திறவுகோல்கள் என்றும் ஹ்யூலின்கேசி என்ற பிரபல அமெரிக்க ஆராய்ச்சியாளர் அபிப்பிராயப்படுகிறார். அவர் கருத்துகள் நூறு சதம் என் கருத்துக்கு உடன்பாடு. துறவிகளும் சுவாமிகளும் செய்யக் கூடியவற்றை—சாதாரண மக்கள் முயல்வது அபாயமான காரியமாகும்.

அபாயம் என நான் அஞ்சுவது மன மாறாட்டம்—சித்த பேதம் ஆகும். இறந்தவர்களுடன் பேச முயன்றவர்கள், ஆவியின் கருத்துக்களை பேனாவைக் கொண்டு எழுதி இயக்கப்பட்டு—ஊயா பிளான்செட் போர்டு முதலியவற்றில் இறங்கியவர்கள்—சொந்த மன நிலையைப் பறி கொடுத்திருக்கின்றனர். அந்த உலகை எதற்கும் சார்ந்து இவ்வுலக வாழ்வின் பயனை இழந்து விடுகின்றனர். அப்படி ஆட்பட்டவர்களின் (பர்சனாலிட்டி) குணநலன் மாறிப் போயிருக்கிறது. ஆகவேதான் இது அபாயம் என்கிறேன்.

4. சுவாமிகள் இவ்வுலக வாழ்க்கையைப் பற்றித் தான் திரும்பத் திரும்பக் கூறுகிறார் என்பது 'நல்ல விஷயம்.' அவர் புத்தகத்தைப் படிக்க ஒரு வாய்ப் பினைத் தந்ததற்கு—அவருக்கு என் நன்றியைத் தெரி வித்துக் கொள்கிறேன்.

சுவாமிகளது புத்தகத்தைப் பற்றிய என் அபிப் ராயங்களைத் தெரிவித்தேன். குறை காணும் நோக்கத் துடன் அல்ல.

துறவறத்தை ஒருவர் மேற்கொண்டிருக்கிறார் என்பதற்காகவோ, அரசியலில் மேம்பதவியை ஒருவர் வகிக்கிறார் என்பதற்காகவோ நாம் அவர் சொல்வதை யெல்லாம் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதில்லை. அதே சமயம் ஒருவர் துறவி உருவில் வாழ்கிறார். ஒருவர் அரசியலில் மேம்பதவியை வகிக்கிறார் என்பதற்காக அவரைத் தூற்ற வேண்டும், பரிகசிக்க வேண்டும் என்பதல்ல. அந்த நடுநிலையுடனேதான் இதை எழுது கிறேன்,

சிலர் தங்கள் அனுபவங்களை எனக்கு எழுதியிருக் கின்றனர், நாகர்கோவிலில் இருந்து திரு. ரெசாக் என்பவர், இஸ்லாமிய வேத புத்தகமான 'குர் ஆனி' லிருந்து மேற்கோள்களையும் விளக்கங்களையும் எடுத்துக் காட்டி இருக்கிறார். நன்றி.

அமெரிக்காவில் நடத்தப்படும் சமீபத்திய ஆராய்ச்சிகள் நமக்குப் புகட்டும் பாடம்: இவ்வுலக வாழ்க்கையைப் பற்றித்தான் 'அந்த உலகைப்பற்றி அறிந்து கொள்வது இந்த உலகின் நம் அன்றாட வாழ்க்கையைச் சீர்படுத்தவும் நெறிப்படுத்தவும் நம்மை ஊக்குவிக்கக்கூடும்.

இதிலிருந்து நான் பெற்றது, வாழ்வின் திறவுகோல் அன்பு என்பதுதான். அறிவு என்பதுதான். வள்ளுவர், 'அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை பண்பும் பயனும் அது' என்றார். வாழ்க்கையின் பயன் அதுதான். வாழ்க்கை ஒரு நல்ல வாய்ப்பு; நாம் மகிழ்வுடன் செயல்படவும், பிறருக்கும் சமூகத்திற்கும் பயன் படவும் ஓர் அருமையான வாய்ப்பு. மகிழ்ச்சி என்பது நாமே உருவாக்கிக் கொள்ளக்கூடிய ஒரு மனநிலை; பிறரோ, சூழ்நிலையோ தருவதல்ல.

அதேபோல் மனம் நல்லெண்ணங்களின் பிறப்பிடம் ஆகும்போது, அங்கிருந்து 'சூரியக் கதிர்கள்' புறப்படு கின்றன. மனத்திலிருந்து நல்லெண்ணம் புறப்படும்போது எந்தவிதமான எதிர்ப்பும், பொறாமையும், வெறுப்பும், கோபமும் உங்களை ஒன்றும் செய்யமுடியாது. அப்படி ஓர் உயர்ந்த வாழ்க்கையை நாம் வாழவேண்டும். அன்றாட வாழ்விலும் அப்படி வாழ முடியும்.



